# பதினெண் சித்தர்கள் வரலாறு





எஸ். கோபால கிருஷ்ணன்

91/4

# பதினெண் சித்தர்கள் வரலாறு

எஸ். கோபால கிருஷ்ணன், பிஏ., பிடி.,



பிருந்தாவனம்

323/10, கதிரவன் காலனி
அண்ணா நகர் மேற்கு
சென்னை - 600 040

## நூல் பற்றிய விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பதினெண் சித்தர்கள் |
| ஆசிரியர் | : | எஸ்.கோபால கிருஷ்ணன் |
| மொழி | : | தமிழ் |
| முதல் பதிப்பு | : | ஆகஸ்ட் 2007 |
| தாள் | : | 11.6 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18.5 செ.மீ. X 12.5 செ.மீ. |
| பக்கங்கள் | : | 144 |
| வெளியிடுவோர் | : | **பிருந்தாவனம்**<br>323/10, கதிரவன் காலனி<br>அண்ணா நகர் மேற்கு,<br>சென்னை - 40. |
| நூல் கட்டு | : | தாள் அட்டை |
| பொருள் | : | சித்தர்களின் வரலாறு |
| ஒளியச்சு | : | ஸ்டான்வி கிராபிஃக்ஸ் \| 9841886184 |
| அச்சிட்டோர் | : | சூர்யா பிரிண்டர்ஸ் & பைண்டர்ஸ்<br>ஆயில்மாங்கர் தெரு, சென்னை-14 |

**விலை : ரூ. 50.00**

91/4

# பொருளடக்கம்

# முன்னுரை

இந்த பதினெண் சித்தர்கள் வரலாற்று நூலில் முதலில் வரும் குருதட்சணாமூர்த்தி, சுப்பிரமணிய சித்தர், நந்தி தேவர் ஆகிய மூவரும் சித்தர் பரம்பரையைச் சேர்ந்தவர்களே அல்ல. சித்தர் பரம்பரை தோன்றியதற்கே மூலகாரணமானவர்கள்.

குருதட்சணாமூர்த்தி: இவர் ஆதியும், அந்தமும், அருவமும் உருவமும், அருவுருவமும் அல்லாத ஞானமயமான மூலப்பரம்பொருளின் வெளிப்பாடே ஆவார். இவர் குருதட்சணாமூர்த்தி வடிவத்தில் முதல் ஞானாசிரியராக வெளிப்பட்டு சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் கல்லால மரத்தடியில் மோனநிலையில் இருந்து சூன்யமயமான சுத்த பரஞானத்தை சொல்லாமல் சொல்லிப் புரிய வைத்ததே பிரபஞ்சத்தின் முதல் உபதேசமாகும். இவர் சித்தர் பரம்பரை தோன்றுவதற்கே முதல் வித்திட்டவராவார்.

சுப்பிரமணியர்: சிவனாரின் தவஞான நிலையில் ஆக்ஞைபீடமான அவருடைய நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகளாக வெளிப்பட்ட ஞான ஒளிவிளக்கே சுப்பிரமணிய சித்து. பஞ்ச முக சிவத்தின் ஆக்ஞை மையத்திலிருந்து பிரபஞ்ச ஆற்றலின் உன்னத நிலையான அறுமுகச் சிவமாக இந்த சித்து

வெளிப்பட்டது. இந்த சித்து மனித இதயமான அகத்திற்கு உணர்த்திய உன்னத ஞானமே சுப்பிரமணிய ஞானம். ஒரு உண்மை குரு முகமாக இந்த ஞானத்தைப் பெறுபவர்கள் யாவருமே அகத்தியர்கள்தான். அகத்தியர் என்ற சொல் ஒரு காரணப் பெயர் அதை அகம் + தீ + அர் எனப் பிரித்தால் அது "ஞானத்தீயையே இதயமாகக் கொண்டவர் என்றே பொருள்படும். இந்த அகத்தீயைத் தன்மயமாகக் கொண்டவர் சுப்பிரமணியர். இந்த காரணப்பெயர் 'சு + பிரமம் + மணி + அர்' எனப்பிரிந்து "துய, பரவெளிமுழுவதும் ஊடுருவி நிறைந்துள்ள இரத்தின மயமான ஞானப்பேரொளியாக உள்ளவர்" என்று பொருள்படும். இவரது அகத்தீயை முழுவதுமாக உள்வாங்கி எங்கும் பிரதிபலித்துவரும் பண்பின் உருவக வெளிப்பாடே அகத்தியர். இங்கு அகத்தியம் என்பது ஒவ்வொரு மனிதனின் உண்மையான ஆன்ம தரிசனமே ஆகும். இந்த ஆன்ம தரிசனத்தை முழுமையாகப் பெற்றே ஒரு ஆன்மா வான வெளியில் நம் சூரியனைவிட பல மடங்கு அதிக ஒளியுள்ள ஒரு மகாநட்சத்திரமாக ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. அதுவே அகத்தியர் என்னும் மாமுனிவர். சுப்பிரமணிய ஞானத்தை முழுமையாகத் தெரிந்துகொள்ள உதவியாக இருப்பதே புராண அடிப்படையில் வந்த உண்மையான அகத்தியர் வரலாறு எனக்கொள்ளலாம்.

அகத்தியர் வரலாறு: திருவாதிரை நட்சத்திர நாயகனான திருக்கயிலாயபதி பூமியை சமன் படுத்துவதற்காக பூமியின் தென் முனைக்கு அகத்தியரை அனுப்பி வைத்தார் என்பது புராணக் கதை. உண்மையில் சிவப்பரம்பொருள் பூமிக்கு வடக்கே துவாதச பாழ்வெளிமண்டலத்திற்கு அப்பால் வெகு தொலைவில் துருவ நட்சத்திரமாய் இருந்து பூமியில் வாழும் மக்களுக்குத் திசைகளை

உணர்த்தி வழிகாட்டிவருகிறது. துருவ நட்சத்திரம் உள்ள வடக்கு திசையைத் துல்லியமாக அறிந்துணர புலகர், கீரது, அத்திரி, புலத்தியர், ஆங்கிரசர், வசிஷ்டர், மரீசி ஆகிய சப்த ரிஷிகளும் உலக மக்கள் எளிதில் பார்க்கும் வண்ணம் சப்தரிஷி மண்டலமாக அமைந்திருந்து பூமியின் வட பாகத்தை - சிவப்பரம்பொருளான துருவ நட்சத்திரம் உள்ள திசையைத் துல்லியமாகக் காண்பித்து வருகிறார்கள்.

துருவ நட்சத்திரம் பூமிக்குப் பாதுகாப்பாக அகத்தியரும் (கைலாய பதியின் விருப்பத்திற்கிணங்க) பூமிக்குத் தெற்கே வெகு தொலைவில் நாம் வாழும் பால்வழி நட்சத்திர மண்டலத்திலேயே மிக அதிக ஒளி மிக்க நட்சத்திரமாக இருந்து பூமியின் சமன் பாட்டைப் பாதுகாத்து வருகிறார். அவர் உள்ள இடம்:

அண்டார்டிகா கண்டத்தை உள்ளடக்கிய பூமிக்குத் தெற்கே வெகு தொலைவில் ஆர்கோ கப்பல் (ARGO THE SHIP) என்ற ஒரு மிகப்பெரிய நட்சத்திரத் தொகுதி உள்ளது. அந்தக் கப்பலில் நான்கு தளங்கள் உள்ளன. நான்காவதான அடித்தளத்தில் ஆல்ஃபா ஆர்கஸ் (ALPHA ARGUS) என்ற நட்சத்திரம் உள்ளது. அதுவே அகத்தியர் நட்சத்திரம். இந்த அகத்தியர் அண்டவெளியில் உள்ள அனைத்து நட்சத்திர மண்டலங்களிலும் (GALAXIES) இரண்டாவது பேரொளி மிக்க நட்சத்திரமாகத் திகழ்கிறார்.

ஆல்ஃபா ஆர்கஸ் என்ற கிரேக்க மொழிச் சொல்லையும் அகத்தியர் என்ற தமிழ்ச் சொல்லையும் கூர்ந்து கவனித்துப் பார்த்தால் சொல் அமைப்பிலும் பொருள் நுட்பத்திலும் இந்த இரண்டு சொற்களும் பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம் (எ.கா. ஆல்ஃபா மனம் = அகமனம்)

நந்தி தேவர்: சிவன் கோவில்களிலெல்லாம் சிவலிங்கத்திற்கு நேர்எதிரில் லிங்கத்திற்கு சம உயரத்தில், லிங்கத்தையே பார்த்த வண்ணம் நந்தி தேவர் அமர்ந்திருப்பதைக் காணலாம். நந்தியின் அனுமதி பெற்றுதான் சிவதரிசனம் செய்யவேண்டும் என்பதும் நந்திக்கும் சிவலிங்கத்திற்கும் இடையே நந்திதேவரை மறைத்து நின்று சுவாமிதரிசனம் செய்யக் கூடாது என்பதும் சைவ சமயமரபு. காரணம் நந்தி, சிவத்திடமிருந்து பிரிக்கமுடியாத ஒரு அங்கம் என்பதே.

உடல்கூற்று அடிப்படையிலேயே சிதம்பரம் முதலான பழங்கால சிவாலயங்கள் யாவும் எழுப்பட்டுள்ளன. சித்தர்கள் நெறிப்படி நந்திக்கும் சிவத்திற்கும் இடையே இடைவிடாது வாசி ஓட்டம் (உள்சுவாசம், வெளிசுவாசம்) நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இந்த சுவாச ஓட்டத்தில் நந்தியம்பெருமான், ஆக்ஞையோடியைந்த நாசித் துவாரங்களாகவும் சிவப்பரம்பொருள் சகஸ்ரதளமாகவும் உள்ளன. சிவமும் நந்தியும் பிரிக்கமுடியாத ஒன்று. குருதட்சணாமூர்த்தியிடம் ஞானம் பெற்ற எண்மரில் ஒருவரான திருமூலர் இறைவனை நந்தியாகவே கொண்டுள்ளது சிவமும் நந்தியும் வேறுவேரல்ல என்பதை உறுதி செய்கிறது.

இவற்றையெல்லாம் சேர்த்து எண்ணிப்பார்த்தால் சிவன், நந்தி, முருகன் ஆகிய மூவருமே. மூலப்பரம் பொருளின் புறவடிவங்கள் தான் என்பது எளிதில் விளங்கும். இந்த நூலில் இடம் பெற்றுள்ள பதினெண் சித்தர்களில் பெரும்பாலோர் பிரசித்தி பெற்ற தமிழகக் கோவில்களில் சமாதிபூண்டோர் அல்லது சிவத்துடன் கலந்தோ இருந்து அந்தந்த கோவில்களில் மூலவராகவே இருந்து அருளாட்சி செய்து வருகின்றனர். சில சித்தர்கள் தனித்தனியே சமாதிக் கோவில்களும் கொண்டுள்ளனர்.

இக்கோவில்களில் ஏதேனும் ஒரு கோவிலுக்கு அருகில் வாழ்ந்துவரும் மக்கள் அக்கோவிலில் எழுந்தருளியுள்ள சிவனையோ, முருகனையோ, அம்பாளையோ அல்லது அங்கு சமாதி அடைந்துள்ள சித்தரையோ உண்மையான பக்தியுடன் அந்தக்கோவில் வளாகத்தில் உட்கார்ந்து தினமும் அரைமணிநேரம் கண்மூடி தியானம் செய்து வந்தால் காலப்போக்கில் அங்கு அருளாட்சி செய்துவரும் சித்தர் பரம்பொருளின் திருவருள் துணைகொண்டு அந்த பக்தர்களுக்கு அமைதியான வாழ்வை அளிப்பதுடன் மரணமில்லாப் பெருவாழ்வைப் பெறுவதற்கான தவநெறியையும் தொட்டுக்காட்டி அருள்வார்.

# 1. அருள்மிகு குருதட்சிணா மூர்த்தி சுவாமிகள் முற்பிறவி வாழ்க்கை

சிவனார் சுமார் 6000 ஆண்டுகளுக்கு முன் ஒருமுறை அருள்மிகு குரு தட்சிணாமூர்த்தியாக அவதாரம் செய்திருக்கிறார். இவர் யாரிடமும் தீட்டைச வாங்கியவரல்லர். உலகின் முதல் குருவாகத் தோன்றி பலருக்கு தீட்சை அளித்து, உலகை உய்விப்பதற்காக ஒரு சித்தர் பரம்பரையையே உருவாக்கியவர் என்பதும், கடந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் மன்மதவருடம் ஆவணிமாதம் 12 ஆம் நாள் (29.08.1835) புதன் கிழமை வளர்பிறை திருதியை திதி உத்திரம் நட்சத்திரம் கூடிய நன்னாளில் பகல் 12.00 மணி அளவில் விருச்சிக லக்னம் கன்னி ராசி கூடிய நல்லோரையில் திருவாரூர் வன்மீகபுரத்தில் ஜீவ சமாதிபூண்டு க்ரம வினை பாதிப்புகளுக்கு உள்ளாகி இல்லறவாழ்வில் ஈடுபட்டுவரும் நம்மையெல்லாம் கரையேற்ற வேண்டிய அருட் குருவாக இருந்து வழிகாட்டி வருபவரும், அருவமாய் இருந்து அண்டங்கள் அனைத்தையும் இயக்கிவரும் அந்த ஆதிப்பரம்பொருளே அன்றி வேறு அல்ல என்பது இங்கு ஓர்ந்து உணரற்பாலது.

பரம்பொருள் குருதட்சிணாமூர்த்தியாக முதல் அவதாரம் எடுத்திருந்தபோது - அதாவது 6000 ஆண்டுகளுக்குமுன் எட்டு சீடர்களுக்கு ஆன்மீக ஞானத்தை உபதேசம் செய்திருக்கிறார். அவர்களில் சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகிய

நால்வருக்கும் கல்லால மரத்தடியில் இருந்து சொல்லாமல் சொல்லி (மோனமொழியில்) ஞானோபதேசம் செய்திருக்கிறார். சிவயோகமாமுனி, பதஞ்சலி, வியாக்ரம பாதர், திருமூலர் ஆகியோர் மற்ற நால்வராவர். இந்த உண்மையை திருமந்திரம் 68-ம் பாடலில் திருமூலர்

“நந்தி அருள்பெற்ற நாதரை நாடினின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோடு எண்மருமாமே.”

என்று விளக்கியுள்ளார். சிவபெருமானின் குரு மூர்த்தமான தட்சிணா மூர்த்தி சுவாமிகள் பதஞ்சலி முனிவருக்கு,

“பாரப்பாபதஞ்சலியே சொல்லக்கேளாய்
பாங்கான முப்பூவை அறியவேணும்
சேரப்பா சுழி முனையில் மனக்கண் நாட்டி
செயலான அம்பரத்தைக் காணவேணும்
நாரப்பா நரம்புதசைத் தோலாம்வீட்டை
நம்பாதே என்மகனே நடுவைப்பாரு
காரப்பா திரிகோண ஆட்சிவீட்டை
கைமுதலாய் சிலேத்துமத்தைக் கழற்றிப்பாரே.”

என்று உபதேசம் செய்துள்ளார். அவரே எழுதிய ஞான சூத்திரம் பாடல்கள் 10-ல் இது 7-வது பாடல். இந்த ஞான சூத்திரம் தவிர திருமந்திரம்1500 என்ற நூலையும் அவர் எழுதியுள்ளார்.

ஆதிசிவனே இந்த தட்சிணாமூர்த்தி என்பதில் ஐயம் ஏதும் இல்லை. இவரைப்பற்றி ‘போகர் ஏழாயிரம்’ என்ற நூலில்,

"ஆதியில் தட்சிணா மூர்த்தியப்பா
அப்பனே அவர்மரபு ஏனெறாக்கால்
நீதியாம் கவுண்டன்என்ற மரபே யாகும்
நிஷ்களங்கம் ஆனதொரு மூர்த்தி என்பார்"

போ. ஏ: 5716

"கோனான தட்சிணா மூர்த்தியப்பா
குவலயத்தில் வெகுகாலம் இருந்த சித்து
மானான வயதுவும் ஏனெறாக்கால்
மகத்தான ஆயிரத்தி சொச்சமப்பா
பானான படிஏழும் கடலும்சுத்தி
பாரினிலே உழன்றதொரு சித்துதானே."

போ.ஏ: 5807

"காணவே தட்சிணா மூர்த்தியாரும்
காசியினில் திருமந்திரம் பாடினோர்தான்

"ஆணவங்கள் தான் ஒடுங்கி சித்துதானும்
அன்பான காசிபதி சென்றிட்டாரே."

போ. ஏ: 5808

"சென்றாரே நர்மதா நதியின் பக்கம்
சிறப்புடனே தட்சிணாமூர்த்தி நாயன்
குன்றான கரையோரம் மண்டபந்தான்
கொற்றவனார் சமாதிமுகம் சென்றுமல்லலோ
வென்றிடவே ஒருயுகமாம் அறுபதாண்டு
உத்தமனார் தானிருந்த சித்துதானே

போ. ஏ: 5809

**இதன் பொருள்**

'தட்சிணாமூர்த்தி என்பர் ஒரு மகாசித்தர். இவர் கவுண்டர் குலத்தில் பிறந்தவர். களங்கம் சிறிதுமற்ற குருமூர்த்தி. ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்தவர். ஏழு கடல்களாலும் சூழப்பட்ட உலகம் முழுவதும் சுற்றியவர். திருமந்திரம் என்ற நூலைப் பாடியவர். இவர் காசிவரை சென்று திரும்பும் வழியில் நர்மதை நதிக்கரையில் ஒரு மலைக்குன்றின் அடிவாரத்தில் உள்ள ஒரு மண்டபத்தில் சமாதி பூண்டு ஒரு யுகம் அறுபதாண்டு காலமாக ஜீவன்முக்தராக வாழ்ந்து வருகிறார்' என்று போகர் கூறுகிறார்.

**இவரைப்பற்றி அகத்திய முனிவரும்**

"கேளப்பா புலத்தியரே மச்சகேந்திரா
கெடியான மலை வளமாம் தட்சிணாயன்
சூளப்பா நதியாறு குண்ணுமுண்டு
சுந்தரரே வில்விசய பூபா கேண்மோ
நாளப்பா வரைகோடி காலந்தானும்
நானிலத்தில் பிரளயங்கள் கண்டசித்து
பாரப்பா போகாமல் ஸ்தூலந்தன்னை
பார்தனிலே மறைத்து வைத்த சித்துவாமே."

என்று பாடியுள்ளார். போகர் கூற்றும் அகத்தியர் கூற்றும் ஒன்றாகவே இருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இதே குரு தட்சிணாமூர்த்தி இப்போது நம் போன்ற சாதாரணமான இல்லறத்தார்க்கு, திருமூலர், அகத்தியர் போன்ற மகாசித்தர்களும் அடைய முடியாத பேரின்ப வாழ்வை தவம், யோகம் எதுவும் செய்யாமலே அறம் வழுவா பக்தி மூலம் அடைவதற்குரிய எளிய வழியைக் காட்டிவரும் குருவாக திருவாரூர் வன்மீகபுரத்தில் ஜீவசமாதி பூண்டிருந்து அருளாட்சி செய்து வருகிறார் என்று நான் நம்புகிறேன்.

# 2. நந்தி தேவர்

## முன்னுரை

ஆதிகுரு தட்சிணாமூர்த்தியாகிய பரம்பொருளிடம் முதலில் தீட்சை பெற்றவர்கள் எண்மர், அவர்களில் நந்திகள் நால்வர் என்று திருமூலர் திருமந்திரம் 109-வது பாடலில் குறிப்பிடுகிறார். அந்த நால்வர் முறையே சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் என்போராவர். இந்த நந்திகள் நால்வரும் சிவனாரிடம் முதன் முதலில் மிக உயர்ந்ததான மோனதீட்சை பெற்றவர்கள். இவர்கள் நால்வரில் நந்திதேவர் ஒருவரல்ல. திருக்கயிலாயப் பரம்பரையைச் சேர்ந்த ஒருவர் என்பது அவர் கையிலையில் சிவனாருக்கு நிரந்தரமானவாயில் காப்பவனாகவும் வாகனமாகவும் இருந்துவருவதிலிருந்து தெரிகிறது.

## நந்திதேவரின் தோற்றம்

மிகப் பழங்காலத்தில் இப்போதுள்ள தஞ்சைமாநகரை அடுத்துள்ள திருவையாறு என்ற திருத்தலத்தில் மகாதவ யோகியாகிய சிலாத முனிவரும் அவர் மனைவி சாருட்சனை என்ற சித்திரவதியும் நல்லறமாம் இல்லறம் நடத்திவந்தனர். நீண்டகாலமாக அவர்களுக்கு மகப்பேறு கிட்டவில்லை. ஒருநாள் சப்தரிஷிகளும் அவருடைய ஆஸ்மரத்திற்கு வந்தனர். சிலாத முனிவர் அவர்களை தம் வீட்டில் உணவருந்திச் செல்லும்படி வேண்டினார். அந்த ரிஷிகள் எழுவரும் 'பிள்ளையில்லாத வீட்டில் உணவருந்தமாட்டோம்' என்று கூறிச் சென்றுவிட்டனர். அதனால் சிலாதர் திருவையாறு திருத்தலத்தில் உள்ள சூரிய புஷ்கரணியில் நீராடி பஞ்சாட்சர தவம் செய்து வந்தார். அவரது தவத்திற்கிரங்கிய

சிவபெருமான் அவர்முன் தோன்றி, 'சிலாதரே' விரைவில் உமக்கு கருவில் இருந்து பிறவாத திருமகன் ஒருவன் கிடைப்பான். மரணமில்லாத அத்திருமகன் எனக்குச் சமமானவன். என்னை தரிசிப்பவர்கள் யாவரும் அவனையும் வழிபடுவார்கள் என்று கூறி மறைந்தார்.

அக்காலமுறைப்படி ஒரு சமயம் சிலாதர் யாகம் செய்ய பூமியை தோண்டியபோது பூமிக்கு அடியிலிருந்து நவரத்தினம் பதித்த தங்கப்பெட்டி ஒன்று கிடைத்தது. பெட்டியைத் திறந்ததும் அதில் சிலாதர் பேரொளிமயமாக மான் மழுவேந்தி மதி சூடியிருந்த முக்கண்ணன் திருவுருவையே கண்டார். அப்போது அசரீரி ஒன்று 'பெட்டியை மூடித்திற' என்று கூற அவரும் அவ்வாறே பெட்டியை மூடித்திறந்து பார்த்தார். அதனுள் அருள் ஒளி நிறைந்த ஆண் குழந்தை ஒன்று இருக்கக்கண்டார். நந்தி என்று பெயர் சூட்டி அக்குழந்தையை வளர்த்து வந்தார்.

குழந்தைக்கு வயது ஏழானபோது சிலாதர் ஆஸ்ரமத்திற்கு வருகைதந்த மித்ரர், வருணர் ஆகிய இரு தேவர்களும் சிலாத முனிவரிடம் "முனிவரே உங்கள் மகனுக்கு ஆயுட்காலம் எட்டு ஆண்டுகள்தான்' என்று கூறி மறைந்தனர். இதைக் கேட்ட நந்தி சிலாதரைப் பார்த்து "தந்தையே நீங்கள் கவலைப்படாதீர்கள். கால காலனான சர்வேஸ்வரன் திருவருளால் நான் நீண்டகாலம் வாழ்ந்திருப்பேன் எனக்கு தவம்புரிய அனுமதி கொடுங்கள்" என்று கேட்டு தந்தையின் வாழ்த்தைப்பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழ கடுந்தவம் இயற்றத் தொடங்கினான்.

நந்தி தேவர் சூரிய புஷ்கரணியில் கழுத்தளவு ஆழத்தில் நின்று கொண்டு கைகள் இரண்டையும் தலைக்கு மேல் தூக்கிக் கும்பிட்ட வண்ணம் ஒரு முறைக்கு ஒருகோடி ஜபம் வீதம் எட்டுகோடி ஜபம் செய்துமுடித்து அழிவில்லாத வாழ்நாளைப்பெற்றதுடன்

கயிலையிலேயே சிவத்தொண்டு செய்யும் காவலனாக எந்நாளும் இருக்கும் வாய்ப்பையும் பெற்றார்.

எப்போதும் சிவசிந்தனையிலேயே இருக்கும் நந்தி தேவருக்கு சிவனாரே பூமிக்கு வந்து பெண் பார்த்து திருமணம் முடித்து வைத்தார். திருசிக்கு அருகில் உள்ள திருமழபாடியில் தவ வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கும் வசிஷ்டரின் பேத்தியாகிய சுயசையை மணமகளாகத் தேர்ந்து நந்திக்கும் சுயசைக்கும் திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோவிலில் தேவர்களும் முனிவர்களும் வாழ்த்துரை வழங்க திருமணம் முடித்து வைத்தார். அதுமுதல் இன்று வரை சிவபக்தர்கள் யாவரும் தன்னை வழிபட்டு தன் அனுமதி பெற்றே சிவதரிசனம் செய்யவேண்டும் என்பதை விளக்கும் வண்ணம் எல்லா சிவன் கோவில்களிலும் சிவன் சன்னதிக்குப் புறத்தே இருந்து அருளாட்சி செய்து வருகிறார். இவர் எப்போதும் சிவ சிந்தனையில் சிவத்துடனேயே இருந்துவருவதால் இவரைத்தான் திருமூலர் சிவயோக மாமுனி என்று குறிப்பிட்டிருப்பாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இன்றளவும் சிவபக்தர்கள் சிவபெருமானை வழிபட நந்திதேவர் துதிசெய்யும் முறை

வந்திறை அடியில் தாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப்படையால்தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பையாக்கும்
நந்தியெம்பெருமான்பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்

-திருவிளையாடல் புராணம்

(மனதில் சொல்லுதல்! சதா சிவதியானத்தில் ஆழ்ந்திருக்கும் நந்தி கேசுவரரே! அம்மையப்பரைக் கண்டு வணங்க விடை தந்தருள்க.)

# 3. சுப்பிரமணிய சித்தர்

**முன்னுரை:**

*1.சுப்பிரமணிய சித்தரைப்பற்றி தெரிந்துகொள்ள அவர்யார்? 2. அவர் காலம் 3. அவருக்கும் சிவனுக்கும் உள்ள சம்பந்தம் 4. அவரிடம் உபதேசம் பெற்ற அகக்தியர் யார்? 5. அவர் உபதேசங்களிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியவை யாவை? என்பனவற்றை யெல்லாம் ஓரளவாவது தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.*

**சுப்பிரமணிய சித்தர் யார்?**

*சுப்பிரமணிய சித்தர் அகத்தியருக்கு உபதேசம் செய்த 'சுப்பிரமணிய ஞானம்' என்ற உபதேச நூலில் எண்சீர் விருத்தப் பாக்களாக ஒரு காப்புச் செய்யுளும் 32 நூற்பாக்களும் உள்ளன. அதில் வள்ளி தெய்வயானை புராணக்கதைகள் இடம் பெறவில்லை. காப்புச் செய்யுளில் 'ஓங்காரவடிவேல்' என் று ஒரு அடிவருகிறது. அந்த வடிவேல் நாம் அறிந்துள்ள முருகன் கைவேலே அல்ல. உண்மையில் அது சிவயோக மோனநிலையின் உச்சம். செய்யுளின் உட்கருத்துப்படி 'தான்யார்? என்பதைத் தன் ஞானத்தால் ஓர்ந்துணர்ந்து பரவெளியோடு மனம் ஒன்றிய நிலையில் ஆதி சித்தசிவநிலயை ஒருயோகி எய்துதலே வேல் தத்துவமாகும். இந்த ஓங்கார வடிவேல் தத்துவ விளக்கமாவது: ஆழ்ந்த அகன்ற, அதி*

கூர்மையான ஆன்மீக சிகரத்தை எட்டிய ஞானமே அந்த ஓங்காரவடிவேல். அந்த உண்மை ஞானத்தின் புற வெளிப்பாடே பழனிமலைமீது இளந்துறவிக்கோலத்தில் காட்சியளிக்கும் தண்டாயுதபாணி. ஞானப்பழமான இந்த இளம்சித்தன் முற்றும் துறந்தமுக்காலத்தையும் உணர்ந்த மகாஞானி.

இந்த சித்த புருஷனை பிற்கால ஞானிகள் இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி ஆகிய முப்பெரும் சக்திகளின் மயமான வள்ளி, தெய்வயானை உடனுறை வேலாயுதன் வடிவில் ஞானக் கண்ணால் கண்டு, கண்டதனை அப்படியே புறவுலகில் பாமரரும் எளிதில் வழிபட்டு உய்யும் வண்ணம் சிலை உருவங்களாக வடித்து பல்வேறு தலங்களிலும் கோவில் கொண்டு எழுந்தருளி அருளாட்சி புரியச் செய்துள்ளனர். இந்த சில்ப முனிவர்களை ஒத்த ஞானமுடைய நக்கீரர், குமரகுருபரர், அருணகிரிநாதர் போன்ற தமிழ்முனிவர்கள்பலர் திருமுருகன் அருளாட்சிக்கு எளிய விளக்கங்கள் அளித்து எல்லா மக்களும் உள்ளத் தெளிவும் பக்தி உணர்வும் நிரம்பப்பெற்று பரம்பொருளை முருகன் வடிவிலேயே கண்டு வழிபாடு செய்து இப்போது வாழும் பிறவியில் நல்வாழ்வு வாழ்ந்து மரணத்திற்குப் பின் முக்திப் பேறு அடையவும் உதவியுள்ளனர்.

**முதல் சித்தரான சிவனாரே சுப்பிரமணிய சித்தர்:**

நம் புலனறிவால் அறிய முடியாவண்ணம் ஒளி உடலோடு மட்டும் எண்ணற்ற மகான்கள் நம்முடன் வாழ்ந்துவருகிறார்கள். அவர்கள் அருவமாக (இடம், காலம், இயக்கம் ஆகிய முப்பெரும் மூலங்களுக்குமே ஆதாரமாக) பிரபஞ்சம் முழுவதும் நிறைந்துள்ள ஆதிமூலப் பரம்பொருளுடன் நேரடியாக மானசீகத் தொடர்பு கொண்டு அந்தப் பரம்பொருளின் திருவருளால் மக்களினம்

நல்வாழ்வு வாழ்ந்து முக்திப் பேரடைய உதவிபுரிந்து வருபவர்கள்; மும்மலத்தையும் கடந்தவர்கள்; நமக்குமட்டுமல்ல, முக்காலமும் உணர்ந்த ஞானிகளுக்கும்கூட காணக்கிடைக்காதவர்கள். பிறப்பு, இறப்பு அற்றவர்கள்; இருவினை பாதிப்புகள் இல்லாதவர்கள். தீயசக்திகள் தலையெடுத்து சத்தியத்தையே அழிக்க முற்படும்போது சத்தியத்தை நிலைபெறச்செய்து நல்லோர்களை உய்விப்பதற்காக, தாமே விரும்பி மனிதப் பிறவி எடுத்துவருபவர்கள். இவ்வாறு உலக நன்மைக்காக உலகில் அவதரித்தவர்களில் முதன்மையானவர் சிவன். அந்த சிவனாரின் மறு அவதாரமே சுப்பிரமணிய சித்தர்.

**சிவனே முருகன் என்பதற்கான ஆதாரங்கள்:**

பத்தாயிரம் ஆண்டுகளுக்குமுன் (அதாவது முதல் கடல் கோளுக்கு முன்) தென்தமிழ்நாட்டில் முதன்முதலில் சங்கம் வைத்து, தமிழ் வளர்த்த இறையனார் சிவனே அல்லாது வேறொருவர் அல்லர். மாணிக்க வாசகரும் சிவ புராணத்தில் "தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்கும் இறைவன்' என்று பாடியுள்ளார். அதே நேரத்தில் சுப்பிரமணியர் 'அறுமுகச் சிவன்' என்றே அழைக்கப் படுகிறார். "ஆறுமுகன் அவனும் யானும் பேதமன்றாய்' என்று சிவனே கூறும் கந்தபுராண அடிகள் அதை உறுதி செய்கின்றன.

முதல் சித்தராகிய சிவபெருமான் ஈசானம் (கிழக்கு), வாமதேவம் (மேற்கு), அகோரம் (வடக்கு), தத்துபுருஷம் (தெற்கு), சத்தியஜோதம் (வான்பகுதி) ஆகிய ஐந்து திசைகளையும், பஞ்ச பூதங்களையும் தன் ஞானத்தால் வென்றடக்கியதால் அவர் பஞ்சமுக ஈஸ்வரன் என்ற பெயரைப்பெற்றார். பிற்காலப் புராணங்கள் அவரை ஐந்து முகங்களை உடைய கடவுள் என்று சித்தரித்துவிட்டன. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு (இரண்டாம் கடல் கோளுக்கு முன்) நடந்த இரண்டாம் தமிழ்ச்சங்கத்தலைவரான

அகத்தியருக்கு தமிழ் இலக்கணத்தைக் கற்பித்தவரும் ஞானோபதேசம் செய்தவரும் சுப்பிரமணிய சித்தர் என்று சுப்பிரமணிய ஞானம் கூறுகிறது. அகத்தியர் சுப்பிரமணிய சித்தரிடம் சீடராயிருந்து கலை ஞானங்களையெல்லாம் கற்றபோது எப்போதும் சிவனுடனே இருந்துவரும் நந்தீசரும் உடன் இருந்திருக்கிறார்.

சிவம் சுப்பிரமணியராய் அவதரித்திருந்ததால் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, ஆகாயம், ஆகிய ஐந்து திசைகளுடன் ஆறாவது திசையான பூமியின் கீழ்பாகத்தையும் வெற்றிகண்ட அதோமுக ஞானத்தையும் வெளிப் படுத்தினார். அதனாலேயே அவர் அறுமுகச்சிவன் என்று சிறப்பிக்கப்பட்டார். இதை மையமாகக் கொண்டு முருகனை ஆறுமுகன் என்று அழைப்பதும் ஆறு முகங்களை உடைய கடவுளாக சிலைவடிவில் அமைத்து வழிபட்டு வருவதும் வழக்கத்தில் வந்து விட்டன. இவை அனைத்தையும் ஒப்பிட்டுப்பார்க்கும்போது சிவசித்தனும். சுப்பிரமணியசித்தனும் வேறு வேறு அல்ல என்ற உண்மை தெளிவாக விளங்குகிறது.

(முதல் சித்தனாகிய சிவனும் இரண்டாம் கடல்கோளுக்கு முன் வளர்ந்திருந்த இரண்டாம் தமிழ்ச்சங்ககாலத்தில் அகத்தியருக்கு உபதேசித்த சுப்பிரமணிய சித்தரும், அவருடைய சீடரான அகத்தியரும், அகத்தியருடைய சீடரான தொல்காப்பியரும் சித்தர்கள் என்றே அழைக்கப்படவில்லை. ஏனெனில் சித்தன் என்ற சொல் பழந்தமிழ் இலக்கியங்களில் இடம் பெறவில்லை. இவர்கள் காலத்தில் இருந்த நூல்களான இறையனார் அகப்பொருள், அகத்தியம், தொல்காப்பியம் போன்ற பல பழந்தமிழ் நூல்களில் நமக்குக் கிடைத்துள்ள ஒரே தமிழ் நூல் "தொல்காப்பியம்", இந்த நூலில் 'சித்தன்' என்ற சொல் இடம்பெறவே இல்லை.

'நிறைமொழிமாந்தர்" என்ற சொல் தான் இடம்பெற்றுள்ளது. எனவே சிவனார், சுப்பிரமணியர், பொதிகை மலைச்சாரலில் சமாதிபூண்டு அருளாட்சி செய்துவரும் அகத்தியர் ஆகியோர் சித்தர்களுக்கெல்லாம் மேலான "நிறைமொழிமாந்தர்களே" ஆவர். இவர்களில் அகத்தியர் பற்றிய கருத்துக்கள் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டுள்ளது. இந்த பிற்சேர்கை சுப்பிரமணிய சித்தரைப் பற்றி முழுமையாக அறிந்துகொள்ள உதவும் என்று தோன்றுகிறது).

இவர்கள் நிறைமொழிமாந்தர் என்றே அழைக்கப்பட்டனர் என்ற உண்மையை

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழிதானே மந்திரம் என்ப"

என்ற தொல்காப்பியர் கூற்றும்

"நிறைமொழிமாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்"

என்ற திருவள்ளுவர் கூற்றும் உறுதிசெய்கின்றன.

'சுப்பிரமணிய ஞானம் 32' ஐத்தவிர சுப்பிரமணிய ஞானம் என்ற பெயரிலேயே மேலும் ஏழெட்டு நூலகள் உள்ளன. அவற்றோடு சுப்பிரமணிய சுத்த ஞானம், சுப்பிரமணியர் ஞானக்கோவை போன்ற வேறுபல நூல்களும் உள்ளன. எல்லா நூல்களும் சுப்பிரமணியர் அகத்தியருக்கு உபதேசித்தவைகளாகவே உள்ளன. "சுப்பிரமணிய ஞானம் 25" என்ற நூலின் 14-ம் பாடலில் நூறாண்டு வாழ்பவர் யார்? என்பது,

"..... முப்பதாண்டு மட்டும்
அலக்கழிவில்லாமல் அவன் விந்துகட்டி
வருமமுடன் தானிருந்து பெண்ணைச் சேர்ந்து

வன்மையுறக் கருத்தரித்துப் பிள்ளை யீன்றல்
அருமையுள்ள பிள்ளையது வயதுநூறாம்
அன்புடனே தானிருந்து வாழ்வான் பாரே"

என்ற அடிகளால் விளக்கப்படுகிறது.

இதன் பொருள்: ஒரு ஆண்மகன் 30 வயதுவரை சுத்த பிரம்மச்சாரியாக விந்தழிவுக்கு இடம் கொடாமல் இருந்து மனைவியைச் சேர்ந்து பிள்ளைபெற்றால் பிறக்கும் பிள்ளை அன்புடையவனாக நூறாண்டு வாழ்வான்.

சுப்பிரமணிய ஞானம் 500இல் 428ஆம் பாடல்

"அடாதே நீபடித்த வித்தையெல்லாம்
அப்பனே பணம்பறிக்கப் படித்தாப்போலே
நாடாதே செகத்தோரை மயக்கிடாதே
ஞானியென்று செகந்தனிலே அலைந்திடாதே"

சித்தர்கள் சித்துவிளையாடக் கூடாது என்று கண்டிக்கிறது.

'சுப்பிரமணிய ஞானம் 32இல் வரும் 32 பாடல்களுமே தவயோக நெறிகளையும் பல்வேறு சித்திகளையும் மறைபொருளாக விளக்குகின்றன.

**அவைகளில்:**

பாடல் 1: பராபரமாகிய வெட்டவெளியில் அரூப நிலையிலேயே சிவசக்தி ஐக்கியம் ஏற்பட அக்கணத்திலேயே மிகப்பேரளவில் ஒலியும், ஒளியும் வெளிப்பட்டன. அவற்றைத் தொடர்ந்து பிரபஞ்சப் படைப்புகளும் அவைகளில் ஏழுவகை உயிரினங்களும் தோன்றின. நீதி என்ற அறிவால் தானாய் நின்று, நிறைந்த நிஷ்களங்க நிலை அடைந்து சத்தி சிவ அருளாலே

சண்முகமும் (நாம முருகனாய் வழிபடும் பரம்பொருளாற்றலும்), கணபதியும் (ஓங்காரப்பெருவெளியும்) உண்டாயின.

இங்கே சண்முகன் என்பது சூக்கும சரீரத்தில் உள் ஆறு ஆதாரஞான மையங்களையும், கணபதி என்பது முக்குணங் களையும் கடந்த மனோ விகாரமற்ற நிலையில் சகஸ்ர தளத்தில் உள்ளொளி காணும் நிலயையுமே உணர்த்துகின்றன. (இதையே வேறுவகையில் கூறினால் 'பிரபஞ்சம் முழுவதிலும் வெளிமுகமாக மனதைச் செலுத்தி ஒருமுகப்பட்ட மோன நிலையிலிருந்து வெட்டவெளித்தவம் செய்வது சண்முகத்தவம் என்னும் அண்டவெளித்தவம். புறத்தே செல்லும் மனதை உள் முகமாகத் திருப்பி தனக்குள்ளேயே பிரம்மத்தைக் கண்டு அதிலேயே லயமாகியிருத்தல் பிண்டத்தினுள்ளேயே பிரம்மத்தைக் காணும் கணபதித் தவம்.)

2, 3 ஆம் பாடல்கள்: சத்தி சிவம் ஏகமாகி பூரணமாய் நிற்கும்போது வந்துதித்த மாங்கனியை (அதாவது சக்தி சிவ ஐக்கியத்தால் சகஸ்ர தளத்தில் உற்பத்தியாகி சுரக்கும் அமுதத்தை) மேருமலையை நன்றாக சுற்றி வருபவர் பெறுவர் என்று அண்ட சாராசர பரிபூரண அறிவு உணர்த்தியது. தான் இருக்கும் இடத்திலேயே அசையாமலிருந்து சிவசக்தியை இதய கமலத்தில் இருத்தி ஒருமுகமாக மோன நிலையில் வழிபட்டு வந்தால் சகஸ்ரதளத்தில் பிரம்ம ஞானஒளி தோன்றும். ஒளிரும் அந்த ஞானாமிர்த வெள்ளத்திலேயே தன்னையே மறந்த நிலையில் சும்மாயிருந்து சுகம் காண்பதையே மறைபொருளாக கணபதி மாங்கனி உண்ட கதை உணர்த்துகிறது. இந்த மூலப்பிரணவ தவத்தில் சகஸ்ரதளமே மேரு மலையாகும். நமக்குள்ளேயே இருக்கும் இந்த மேருமலையையே மாங்கனி உண்ட கணபதி கதை சூக்குமமாகத் தெரிவிக்கிறது.

*5ஆம் பாடல்: ஏகாந்த மயில் வீரன் என்று குறிப்பிடப்படுபவர் வாசியோகி. இவர் மூலாதாரம் முதல் ஆக்ஞைவரை பறந்தோடிக் கொண்டிருக்கும் வாசியாகிய மயில் மீதேறி ஆறாதாரங்களையும் கடந்து மேலே சென்று சகஸ்ரதளமாகிய மகா மேருவை அடைந்த ஞானக்கந்தன். பரம்பொருள் ஞானத்தின் உச்சியை எட்டிய இந்த மயில்வாகனனுக்கும் ஞானாமிர்தமாகிய மாங்கனியை அளித்து "மகத்தான அண்ட ரண்ட வரைகள் சுற்றி திருந்தியே தீர்க்காயுள் பெற்று வாழ்ந்து தீர்க்க முடன் மலைக்கரசாய் இருந்து வாழே" என்று வாழ்த்தி பிரம்ம ஞான நிலையிலேயே நிலைபெற்றிருக்கச் செய்தது.*

*மேலே கண்ட பாடல்கள் 3-ம், 5-ம் நிலையாக ஒரே இடத்தில் தவமிருந்தும், அருணகிரி நாதரைப்போல் பல தலங்களையும் பக்தியுடன் சுற்றிவந்தும் பிரம்ம நிலையை அடையலாம் என்பதை உணர்த்துகின்றன. மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்பார்க்கு தேங்காய்ப்பால் ஏதுக்கடி என்ற குதம்பைச் சித்தர் அனுபவம் 'இருந்த இடத்திலிருந்தே மோனத் தவத்தின் மூலம் அமுதத்தைப் பெற்றுண்டு மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம் என்று கூறுகிறது. இதுதான் கணபதித் தவமாகும். வானத்தின் மீது ஆடியமயில் (ஒளி) குயில் (ஒலி) ஆனதை வள்ளலார் இராமலிங்க அடிகள் கண்டுணர்ந்ததைப் போல் முழுநிலை அடைந்த பிரம்ம ஞானி புருவமையத்தில் முதலில் ஒளி அனுபவமும் அதைத்தொடர்ந்து கடல் அலை, சங்கு, மணி முதலான ஒலி அனுபவங்களும் பெற்று அவற்றையும் கடந்து சுத்தாகாசபரமோன நிலைக்கே சென்று விடுகிறார் என்பதை "முருகன் மேருமலையைச் சுற்றிவந்து மாங்கனி பெற்றான்" என்ற மறைபொருள்கூற்று தெளிவு படுத்துகிறது.*

*15-ம் பாடல் முதல் 32-ம் பாடல் வரை சுப்பிரமணிய சித்தர் கும்ப முனியாகிய அகத்தியருக்கு ஞானோபதேசம் செய்வதாகவே அமைந்துள்ளது.*

17ஆம் பாடல்: சுழு முனையில் மனதை நிறுத்தி ஓங் - ரீங் - அங் - உங் என்ற மூல ஒலிகளை பதினாறு முறை உறுத்செய்தால் கணபதி தோன்றுவார். அவரைக்கண்டவுடன் ஓம் நமசிவாய என்ற மந்திரத்தை உருச்செய்தால் பிரம ரந்திர தரிசனம் கிடைக்கும்.

18-ம் பாடல்: பஞ்சாட்சரமந்திரத்தை தலைகாலாகவும் கால்தலையாகவும் மாற்றி மாற்றி நமசிவாய நம - வயநமசிவாயநம - சிவாயநம சிவநம ஓம் நமசிவாய என்று மாற்றி மாற்றி ஜபித்தால் உண்மை என்ற ஆதாரம் சித்தியாகும்.

19-ம் பாடல்: விபூதி தரித்து இந்தமந்திரத்தை இடைவிடாது சொல்லிவந்தால் நிலையில்லாத தூலவுடல் நிலைக்கும்.

20 -ம் பாடல் முதல் 28-ம் பாடல்வரை

மேற்கண்ட மந்திரங்களுடன் கூடிய வாசியோகப் பிராணாயாமமும் செய்துவர வேண்டும்.

29-ம் பாடல்: சக்தியை தியானம் பண்ணிப் பிராணாயாமப் பதிவு செய்து பொதிகைமேவி சுகசீவ பிராணகலை வாசியேறி சுழுமுனையில் மனதை நிறுத்தி அமுதபானம் பருக வேண்டும்.

30-ம் பாடல்:

"ஞானமென்ற நிலைகாட்டி மூலங்காட்டி
நாதாந்த ஆறுமுக நிலையும் காட்டி
மோனமென்ற வடிவேலின் முனையும் காட்டி
முனையறிந்து கலைநிறுத்தி முடிமேல் நில்லே."

31-ம் பாடல்: சதுரகிரிமுடியில் சென்று பொதிகை வசமாகி தானே விண்வெளியென்று உறுதிசெய்து மனதை சூன்யத்தில் நிலைகொள்ள செய்தால்,

"சுத்தமுடன் சித்திக்கும் சும்மாநின்று
செல்லப்பா அட்டாங்ககயோகத் தேகிச்
சிவாய குருபாதத்தில் தெளிவாய் நில்லே"

என்றவாறு உபதேசத்தை நிறைவுசெய்துவிட்டு மயில் வீரன் வடிவேல் கொண்டு.

"அழியாத அண்டவரை முடிமேல்சென்றே
அட்டகிரி பர்வதத்திற் கரசுமாகி
ஒழுவாகி அண்டவெளியெங்கும்தானாய்"
ஓங்கார வடிவேலை உவந்தான் முற்றே."

இவ்வாறாக "சுப்பிரமணிய ஞானம் 32" முற்றுப்பெறுகிறது. சுப்பிரமணிய சித்தரான ஓங்கார வடிவேலன் அருளாட்சியில் "நிறைமொழிமாந்தரான" தமிழக அகத்தியர் வழியைப் பின்பற்றிச் சென்று நாமும் பேரின்பவாழ்வுபெற எந்நாளும்

"அட்கிரி பர்வதத்தின் அரசனான ஓங்கார
வடிவேலன்" துணைநிற்பானாக.

சுபம்

## சுப்பிரமணிய சித்தர் - பிற்சேர்க்கை
## (அகத்தியர் பற்றிய உண்மை)

சுப்பிரமணிய சித்தர் நூல்கள் எல்லாம் அகத்தியரை விளித்துக்கூறியவைகளாகவே உள்ளன. அவர் அகத்தியருக்கு நீண்டகாலம் தமிழ் இலக்கணம், வாழ்க்கைக்கல்வி, பிரம்ம ஞானம் முதலாக எல்லா கலைகளையும் கற்றுக் கொடுத்திருக்கிறார். இந்த உபதேச காலம் முழுவதும் நந்தீசரும் அவர்களுடன் இருந்திருக்கிறார்.

இவர்கள் யாவருமே பிரம்ம ஞானிகள். மரணமிலாதவர்கள். எல்லா யுகங்களிலும் வாழ்ந்துவரும் நிறைமொழிமாந்தர்கள். 5000 ஆண்டுகளுக்கு முன் இரண்டாம் கடல் கோள் ஏற்பட்டதில் இறையனார் அகப்பொருள் அகத்தியர் இயற்றிய தமிழ் இலக்கணம் போன்ற எண்ணற்ற நூல்கள் கடலால் கொள்ளப்பட்டு விட்டன. கரைஓரம் ஒதுங்கியதில் கிடைத்த நூல்களில் தொல்காப்பியத்தின் பகுதிகள் தான் குறிப்பிடத்தக்கவை. அந்த இலக்கண நூலில் எங்கும் 'சித்தர்' என்ற சொல் இடம்பெறவே இல்லை. தொல்காப்பியர் அகத்தியர் முதலாக அக்காலத்தில் வாழ்ந்த பிரம்ம ஞானிகள் யாவரும் "நிறைமொழி மாந்தர்" என்றே குறிப்பிடப் படுகின்றனர். கி. பி. 5ஆம் நூற்றறாண்டுக்கும் 14ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த பிரம்ம ஞானிகளே 'சித்தர்கள்' என்று அழைக்கப்படுகின்றனர்.

இக்கால கட்டத்தில் சுமார் 37 அகத்தியர்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்று 'அகத்தியர் வரலாறு' எனற் நூல் கூறுகிறது. இக்காலத்தில் மூன்றுக்கும் மேற்பட்ட அகத்தியர்கள் இருந்திருக்கக்கூடும் என்று தமிழ்நாட்டு சித்தர்களைப் பற்றிய ஆய்வுகள் கூறுகின்றன.

அகத்தியர் பிரமன்செய்த கும்பத்தில் தோன்றியவர். மித்திரன் ஊர்வசிமேல் மோகம் கொண்டு வீரியத்தைக் கும்பத்தில் இட அதில் இருந்து தோன்றியவர்; புலத்திய முனிவரின் சகோதரியான லோபமுத்திரையை மணந்தவர்.

கயிலையில் சிவன் - பார்வதி திருமணத்தின் போது தென் திசைக்கு அனுப்பப்பட்டவர், விந்தியனை (விந்திய மலையை) வென்றவர், வாதாபியை விழுங்கி வில்வவனை அடக்கியவர் போன்ற கதைகள் (*Legends*) பிற்காலத்தில் எழுந்த புராணக்கதைகள்.

இவையல்லாது ஆயுர்வேதபாஷ்யம், சிவஜாலம், சக்தி ஜாலம், சண்முக ஜாலம், அகத்தியர் கர்ம காண்டம் போன்ற பிற்காலத்தில் எழுந்த 96 நூல்கள் அகத்தியர் நூல்களாகவே கருதப்படுகின்றன. அவைகளில் சில ஒன்றுக்கொன்று மாறுப்பட்டக் கருத்துக்களைக் கொண்டவைகளாகவும் உள்ளன. இவர்கள் காலத்தில்தான் 'சித்தர்' என்ற சொல் இடம்பெற்றுள்ளது சித்தர்கள் பற்றிய வெவ்வேறு ஆய்வாளர்கள் பதினெண் சித்தர்கள் என்று கிட்டத்தட்ட பத்து தொகுப்புகள் கொடுத்துள்ளனர். அவைகள் அனைத்திலும் அகத்தியர் என்ற பெயரிலோ அல்லது கும்பமுனி என்ற பெயரிலோ ஒரு அகத்தியர் இடம்பெறுகிறார் அவைகளில் சித்த மருத்துவ ஆராய்ச்சிக்கழகம் நடத்திய மருத்துவ மாநாடு ஒன்றில் வெளியிடப்பட்ட ஆய்வு நூலில் மட்டும் 18 சித்தர்களின் பெயர்களும் அவர்களின் சமாதிகள் உள்ள கோவில்களும் கூறப்படுகின்றன.

அவைகளாவன:

1. வன்மீகர் (எட்டுக்குடி)
2. கோரக்கர் (பொய்கை நல்லூர்)
3. கமல முனி (திருவாரூர்)
4. குதம்பைச் சித்தர் (மயிலாடுதுறை)
5. தன்வந்திரி (வைத்தீஸ்வரன் கோயில்)
6. சட்டைமுனி (ஸ்ரீரங்கம்)
7. காங்கேயர் (கரூர்)
8. திருமூலர் (சிதம்பரம்)
9. பாம்பாட்டிச் சித்தர் (விருத்தாச்சலம்)
10. இடைக்காடர் (திருவண்ணாமலை)
11. பதஞ்சலி (இராமேஸ்வரம்)
12. சுத்தரானந்தர் (மதுரை)

13. மச்சமுனி (திருப்பரங்குன்றம்)
14. இராமதேவர் (அழகர் மலை-பழமுதிர்ச்சோலை)
15. போகர் (பழநி)
16. கும்பமுனி:அகத்தியர் (திருவனந்தபுரம்)
17. கொங்கணவர் திருப்பதி (திருமலை)
18. நந்திதேவர் (வாரணாசி (காசி)

வேறு சித்தர் சமாதிக் கோவில் தொகுப்புகளில் ஒன்று கும்பமுனி கும்பகோணத்தில் சமாதி கொண்டுள்ளார் என்றும், சட்டைமுனி சீர்காழியிலும், பாம்பாட்டிச் சித்தர் திருஞாலம் என்ற தலத்திலும் சமாதி கொண்டுள்ளனர் என்றும் கூறுகிறது. வேறு சில பதினெண் சித்தர் தொகுப்புகள் கரூரில் கருவூராரும், திருக்கடவூரில் காலங்கிநாதரும், திருவாவடுதுறையில் வெகுளிநாதரும் சமாதி கொண்டுள்ளனர் என்றும் கூறுகின்றன. இவர்களோடு சத்தியநாதர் சகோதநாதர் முதலான நவநாத சித்தர்களும் கூட சித்தர்கள் என்பதில் ஐயமில்லை.

ஆனால் இந்த பதிணென் சித்தர்கள் தொகுப்பில் வரும் எந்த அகத்தியரும் சுப்பிரமணிய சித்தரின் உடனிருந்து குரு-சீடன் முறையில் ஞானம் பெற்ற அகத்தியர் அல்ல என்பதுதான் உண்மை. காரணம் சுப்பிரமணிய சித்தரும் அந்த அகத்தியரும் வாழ்ந்த காலம் இரண்டாம் கடல்கோளுக்கு முற்பட்ட காலம். தெற்கே குமரிமலையும். பஃருளி யாரும் இருந்த காலம். இப்போது இமயம் உள்ள பகுதி தெதியன் கடல் என்ற பெருங்கடல் பகுதியாக இருந்தகாலம். அந்த அகத்தியர் எழுதிய அகத்தியம் என்ற நூலும் கடலால் கொள்ளப்பட்டுவிட்டது. இப்போதும் அவர் பொதிகை மலைப்பகுதியிலிருந்து அருளாட்சி செய்து வருகிறார் என்ற உண்மைதான் நம்பிக்கைக்கு உரியதாக உள்ளது.

# 4. வன்மீக சித்தரின் வாழ்வும் வாக்கும்

வாழ்வு:

வன்மீக சித்தர் பதினெண் சித்தர்களில் முதல் சித்தர். அவர் கலியுகம் ஆரம்பிக்கும் முன்பிருந்தே தமிழகத்தில் வாழ்ந்து வந்தவர். கலியுகத்தில் சித்தர்கள் காலத்தொடக்கமான கி. பி. ஐந்தாம் நுற்றாண்டுவரை, எழுநூறு ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்திருக்கிறார். அவர் தென்னாடுடைய சிவனாகிய குருதட்சண மூர்த்தியும் சுப்பிரமணிய சித்தரும் வாழ்ந்த காலத்தில் அவர்களின் வாழ்க்கையுடன் இணைந்து வாழ்ந்திருக்கிறார். இந்த உண்மையை அவர் பாடியுள்ள 'வால்மீகர் சூத்திரஞானம் 16' என்ற ஞான நூலும் பண்டைத் தமிழக மூவேந்தர்கள் ஆட்சிபுரிந்த பகுதிகளில் சோழர்கள் ஆண்ட பகுதியில் அவர் ஜீவசமாதி அடைந்துள்ள மையும் உறுதிப்படுத்துகின்றன.

அவர் வேடர் குலத்தில் புரட்டாசிமாதம் அனுஷம் நட்சத்திரத்தின் நான்காம் பாதத்தில் விருச்சிக ராசியில் பிறந்தவர். "இவர் தூய தமிழ்ப் பண்டிதராய் விளங்கியவர்; இராமாயணத்தைத் தமிழில் பாடியவர்" என்ற உண்மைகள் போகர் 7000 / 5834, 5835 பாடல்களாலும் போகர் சத்தகாண்டம் 723, 834, 835 பாடல் களாலும் தெரியவருகின்றன. போகர் 7000/5834 ஆம் பாடலில் வரும்

"ஆற்றலுடன் வால்மீக ராமாயணத்தை
அவனிதனில் மாந்தருக்குச் செய்திட்டாரே"

என்ற அடிகளுக்கு திரேதாயுகத்தில் வடநாட்டில் வாழ்ந்த வால்மீகி முனிவர் நாரதமுனிவரின் அருளால் வடமொழியில் எழுதிய இராமகாதையைத் தமிழ் மொழியில் கலியுகத்தில் பாடியுள்ளார் என்று பொருள் கொள்வதே பொருத்தமாய் உள்ளது.

வன்மீகர் இராமாயணத்தைத் தமிழில் பாடியதற்கு ஒரு வரலாற்று அடிப்படையும் உள்ளது. அவர் பல சிவத்தலங்களுக்குச் சென்று சித்தர் நெறியைப் பரப்பியதுடன் சிவவழிபாடு செய்து கொண்டு பாமரமக்களின் மனநோய்களையும் உடற்பிணிகளையும் போக்கிவந்தார். இந்தத் திருத்தல யாத்திரையில் இப்போது திருவான்மியூர் என்ற பெயரில் உள்ள சிற்றூருக்குச் சென்று அங்கு கோவில் கொண்டுள்ள மருந்தீஸ்வரரை வழிபட்டார். அப்போது சிவப்பரம்பொருள் அவர்முன் தோன்றி வன்மீகரே! 'நீவிர் வடமொழியில் உள்ள வால்மீகி இராமாயணத்தைத் தமிழில் பாடும்' என்று ஆணையிட வன்மீக சித்தர் இராமாயணத்தை அழகு தமிழில் பாடி முடித்தார். இதுவே தமிழில் எழுதப்பட்ட முதல் இராமாயணமாகும்.

அதனால் பெருமகிழ்ச்சி அடைந்த மருந்தீஸ்வரர் "இனி இவ்வூர் உன்பெயராலேயே அழைக்கப்படும். இங்கு என்னை வழிபட வரும் மக்கள் உன்னையும் தெய்வமாக வழிபடுவார்கள்" என்று கூறி அருளினார். அதைத் தொடர்ந்து மருந்தீஸ்வரர் கோவிலுக்கு அருகிலேயே வன்மீக சித்தருக்கும் ஒரு தனிக்கோவில் எழுந்தது. மருந்தீஸ்வரர் எழுந்தருளியுள்ள திருத்தலம் "திருவன்மீகியூர்' என்ற திருப்பெயரையும் பெற்றது. அந்தத் திருவன்மீகியூரே காலப்போக்கில் மருவி இப்போதுள்ள திருவான்மியூராக விளங்கி வருகிறது.

இந்த சித்தர் கோவில் மருந்தீஸ்வரர் கோவிலுக்கு மிகவும் அருகிலேயே உள்ளது. இங்கு எழுந்தரளீயுள்ள சித்தர் பெருமான்

தெற்கு நோக்கி நின்று மருந்தீஸ்வரரை வணங்கியபடி அருளாட்சிசெய்து வருகிறார்.

இந்தமகாசித்தர் ஆதிகால சித்தர்களுக்கே வழிகாட்டியாய் இருந்திருக்கிறார் என்பதை இவரது சூத்திர ஞானப்பாடல்கள் மூலம் அறிந்துகொள்கிறோம்.16 பாடல்களைக் கொண்ட அந்த சூத்திரப் பாமாலை 'வன்மீக சூத்திரம் பதினாறு' என்ற பெயரில் விளங்கி வருகிறது. இந்த சூத்திரப்பாடல்கள்தான் பதினெண் சித்தர்கள் பாடல்களுக்கெல்லாம் திறவுகோலாய் உள்ளது. இந்த நூல் ஆதிசிவன் விருப்பத்திற்கு இணங்க பாடப்பட்டது. இந்நூல் உண்மையான ஞான மார்க்கம் எது என்பதை எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம் மிக எளிமையாக விளக்கிக் கூறியுள்ளது. இப்படி விளக்கமாகக் கூறியுள்ளதைப் பொறுத்துக்கொள்ள முடியாத அக்கால மகாசித்தர்கள் பலர் ஆதிசிவனிடம் நேரில் சென்று இவரைப் பற்றி கோள் சொன்னார்கள். அவர்களது பொறாமைப் பண்பைக் கண்டு சிவனாரே கோபப் பட்டார். இனிவருபவை மற்ற பாடல்களின் முக்கிய கருத்துக்களின் விளக்கமாகும்.

**வன்மீகரின் முற்றறிவு:**

அவர் தன் ஞானசூத்திரத்தின் முதல் பாடலின் முதல் வரியையே காப்புச் செய்யுளாக அமைத்துள்ளார். அந்த ஒரு வரியே அவர் முக்காலமும் உணர்ந்தவர்; முற்றறிவுபெற்றவர் என்பதை முழுமையாக வெளிப்படுத்துகிறது. அப்பாடல் வரியும் அதன் விளக்கமும் வருமாறு:

**"இருள் வெளியாய் நின்ற சிவபாதம் போற்றி"**

இதுவே அந்த முதல்வரி.அதன் முதல் சொல்லாய் வரும் 'இருள் வெளியே' அவர்கண்ட சிவம். அவர் கண்ட ஆதிமூலப்

பரம்பொருள். பரமாணு முதலாகப் பேரண்டம் வரையுள்ள அனைத்துள்ளும் ஊடுருவி நீக்கமற நிறைந்துள்ள ஆதிசிவம். இந்த ஆதிசிவத்தைப் போற்றுவதையே தன் சூத்திர நூலின் முதல் அடியாக அதாவது காப்பரணாக அமைத்துள்ளார்.

நாம் காணும் படைப்புலகம் தோன்றுவதற்குப் பலயுகங்களுக்கு முன்பிருந்தே இடம் - காலம் - இயக்கம், ஆகிய மூன்றையும் தன்னகத்தே கொண்டு எல்லாவற்றையும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெரும் தொழில்கள் மூலம் இயக்கி வரும் பேரியக்க மண்டலமான இருள் வெளியே அவர்கண்ட ஆதிசிவம். இந்த சிவத்தையே ஞானிகள் பரப்ரம்மம். பரம்பொருள் என்றெல்லாம் கூறி வருகிறார்கள்.

### விஞ்ஞானப் பார்வையில் சித்தரின் தொலைநோக்கு:

20ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் நாசா விண்ணியல் விஞ்ஞானிகள் "ஆதியில் பிரபஞ்சம் முழுவதுமே இருண்ட ஆற்றலாகத்தான் (Dark Energy) இருந்தது. அந்த இருண்ட ஆற்றலில் இருந்துதான் எல்லா நட்சத்திர மண்டலங்களும் (Galaxies) கிரகங்களும் (Planets) தோன்றின என்பதைக் கண்டு பிடித்துள்ளனர். அவர்களின் ஆய்வுகளின்படி இப்பொழுதுள்ள ஒளிமண்டலம் முழுவதுமே அந்த இருண்ட ஆற்றல் பகுதியின் 27 விழுக்காடுகள் தான். இப்பொழுதுகூட பிரபஞ்சத்தின் 73 விழுக்காட்டுப்பகுதி இருண்ட ஆற்றலாகத்தான் இருந்து வருகிறது. அந்த இருண்ட ஆற்றல்தான் இருள்வெளி, ஒளி மண்டலம் ஆகிய எல்லா பகுதிகளிலும் நீக்கமற நிறைந்திருந்து எல்லாவற்றையுமே இயக்கி வருகிறது என்று ஆய்வுகள் நடத்தித் தெளிவு படுத்தியுள்ளனர்.

இவைகளுக்கெல்லாம் நீண்டகாலம் முன்பாகவே கருவெளியே சிவம் என்று கண்டுணர்ந்த வன்மீகர் தன் காப்புச் செய்யுள் பகுதியில் "இருள்வெளியாய் நின்ற சிவபாதம் போற்றி" என்று எங்கும் நிறைந்த இறை ஆற்றலை வழிபட்டுள்ளார். இவரைப் போன்ற மெய்ஞ்ஞானிகளின் தொலைநோக்குப் பார்வை இன்றும் விஞ்ஞான உலகிற்கு வழிகாட்டியாக இருந்து வருவதுதான் மெய்ஞ்ஞானிகளுக்கே உரிய தனிச்சிறப்பு.

## சித்தன் யார்? என்பதன் விளக்கம்:

தங்கள் தவமுயற்சியால் அஷ்டமாசித்திகளைப் பெற்றவர்கள் யாவருமே சித்தர்கள் என்று கருதப்படுகிறார்கள். அவர்களில் சில மகாசித்தர்களும் கூட தன் முனைப்பால் தவறுகள் செய்து சில சமயங்களில் தாங்கள் முயன்று பெற்ற தவ வலிமையையும்கூட இழந்து விடுகிறார்கள். தம்மையே மறந்து பித்தர்களைப்போல் தனித்து வாழும் அவதூத மகான்களுக்கோ மனமும் ஐம்புல நுகர்வுகளும் இருப்பதாகவே தெரியவில்லை. இத்தகையோர்கள் சிந்தை தெளிந்த சித்தர்கள் என்பது தான் பொதுவான கருத்து.

சித்தன் யார்? என்பதற்கு வன்மீகர் தன் சூத்திரப் பாடல்களில் வரும் 2,3 ஆம் பாடல்களில் தெளிவான ஒரு விளக்கத்தைக் கொடுத்திருக்கிறார். அந்த விளக்கமே பிற்கால சித்தர்களுக்கு வழிகாட்டியாய் இருந்திருக்கிறது என்பது இவ்விரண்டு பாடல்களின் மூலம் தெரியவருகிறது.

2-ம் பாடலில் வரும் 3-ம் 4-ம் வரிகளும் அவைகளின் விளக்கமும் வருமாறு:

**"சிந்தை தெளிந்திருப்பவனார்? அவனே சித்தன்**
**செகமெல்லாம் சிவமென்றே அறிந்தோன்சித்தன்"**

**விளக்கம்:**

*சிந்தை தெளிந்திருப்பவன் யார்? மனிதமனம் எண்ணற்ற எண்ணக் குவியல்களாலானது. இவ்வெண்ணக் குவியல்களால் உலகியல் இன்பங்களையே நாடிநாடி மறுபடியும் மறுபடியும் பிறவிகளை எடுத்துக்கொண்டே இருக்கிறான் மனிதன். நிலையற்ற இந்தப் பிறவிக்கடலிலிருந்து கரை ஏற அவனுடைய சிந்தை தெளிவடைய வேண்டும் என்றால் அவனது மனதை அடைத்துள்ள எண்ணக் குப்பைகளெல்லாம் வெளியேற்றப்பட வேண்டும். அதற்கு ஐம்புலன்கள் சம்பந்தப்பட்ட புறமனச் செயல்கள் அனைத்தும் அழிக்கப்பட வேண்டும். ஆழ்ந்து ஊடுருவிப் பார்த்தால் உலகியலோடு சம்பந்தப்பட்ட புறமன நினைவுகள் யாவும் அகற்றப்பட வேண்டும். ஐம்புலன் நுகர்வுகளையெல்லாம் முழுவதுமாக விட்டுவிலகியுள்ள சுத்த சூன்யமான ஆழ்மனம், தன்னை அகத்தே கொண்ட மனிதனை "தூய்மையான ஆன்மாவே நான்; ஆன்மாவைச் சார்ந்த உடலும் மனமும் எனக்குப் பயன்படும் கருவிகளே" என்று உணரச் செய்யும் 'அந்த சுத்த ஆன்ம உணர்விலேயே நிலைத்திருப்பவனே சிந்தை தெளிந்தவன். அப்படி சிந்தை தெளிந்தவன் தான் சித்தன்' என்கிறார்.*

'செகமெல்லாம் சிவம் என்றே தெளிந்தோன் சித்தன்' என்ற அடுத்த வரியில் சிந்தை தெளிந்திருக்கும் நிறைநிலையைப் பரவலாக்கி ஆன்மாவின் உண்மை நிலையைத் தெளிவுபடுத்துகிறார். இந்த வரியில் 'செகமெல்லாம்' என்று அவர் குறிப்பிடுவது அண்ட சராசரங்கள் அனைத்தையும் தன்னுள் வைத்துக் காத்துவரும் பேரண்டப் பெருவெளியையே ஆகும். இந்தப் பெருவெளியே கருவெளியாகிய ஏகப்பரம்பொருள். இந்தக் கருவெளியின் இடைவிடாத இயல்பான அணுக்கூட்டுச்சிதைவுகளின்

மாற்றங்களே நாம் அறிந்தும் அறியாமலும் தொன்று தொட்டு இருந்துவரும் மாறாத நிகழ்வுகள். இந்த இயற்கை நிகழ்வுகளே ஒலியும், ஒளியும் தோன்றியதில் தொடங்கி புதிது புதிதாகத் தோன்றியும் பெருகியும் வரும் உயிரின வகைகளும், உயிரற்ற பொருள்களும், மின்னாற்றல், ஈர்ப்பு விலக்கு சக்திகள் போன்ற பல்வேறு ஆற்றல்களும் ஆகும். ஆதி ஆற்றலாகிய அந்தப் பரம்பொருளின் வெளிப்பாடுகளே இவைகள் எல்லாம் எனின் நாமும் அந்தப் பேராற்றலின் சிறு சிறு துகள்கள் தானே? அந்த ஆதிப்பரம்பொருள்தான் மனிதமனம் முதலான அத்தனை அண்டவெளி நுண் துகள்களிலும் ஊடுருவி நின்று பிரபஞ்சம் முழுவதையும் இயக்கி வருகிறது. அந்தப் பரம்பொருளே இடம் - காலம் - பொருள் மாற்றம் - தொடர் இயக்கம் ஆகிய இயற்கை நிகழ்வுகளுக்கு ஏற்ப ஒவ்வொன்றையும் அவை அவைகளின் தன்மைகளுக்கும் குணவேறுபாடுகளுக்கும் ஏற்றபடி மாற்றமும திரிபும் அடையும் வண்ணம் அவை அவைகளின் உள்ளிருந்தே எல்லாவற்றையும் இயக்கிவரும் சிவசக்தியாகும் என்ற தெளிவைப் பெற்றிருப்பவனே சித்தன் என்கிறார். அதனால் சமாதி கூடியிருந்து வெளியில் தெரியாமல் அருளாட்சி செய்து வரும் சித்தர்கள் ஆதிபரம்பொருளுக்கு சமமானவர்கள் என்றே மதிக்கப் படுகிறார்கள் (சமம் + ஆதி = சமாதி)

*3ஆம் பாடலின் 5,6,7,8 ஆம் வரிகளும் அவற்றின் விளக்கமும்.*

**"மறிந்துடலில் புகுகின்ற பிராணவாயு**
**மகத்தான சிவசத்தி அடங்கும் வீடு.**
**இறந்து மனத்தெளிவாகி சேர்ந்தோன் சித்தன்**
**சிவசிவா அவனவனென்று உரைக்கலாமே."**

**விளக்கம்:**

'உடல் முழுவதும் நடைபெற்றுவரும் உயிரியக்கத்துக்குக் காரணமான பிராணன் ஜீவ சமாதி அடைந்துள்ள சித்தர்களின் உடலுக்குள்ளேயே அடங்கி இருந்து அவர்களை உணவு, நீர் முதலான எதுவுமின்றி அழிவற்ற நித்யானந்த நிலையில் பல்லாயிரம் ஆண்டுகள் வாழவைத்துக்கொண்டிருக்கும் சிவசக்தியே ஆகும்" என்ற உண்மைத் தெளிவைப் பெற்ற சித்தன் சிவமாகவே மாறி விடுகிறான் என்னும் மறைபொருள் உண்மையை இவ்வரிகளில் விளக்கியுள்ளார்.

## மற்ற பாடல்களில் வரும் சில முக்கிய கருத்துக்கள்:

அவரவர்கள் செய்ய வேண்டிய நித்தியகருமங்களைத் தவறாமல் செய்துகொண்டு உண்மையான குருமார்கள் காட்டும் வழியில் சென்றால் வாசி கூடி வரும். அதன் விளைவாக அந்த சீடன் பதினாறு பேறுகளும் பெறுவான்.

போலி குருமார்கள் பலவகையினராக இருப்பார்கள். காய்கனிகளைத் தின்று கொண்டு வாய்பேசா ஊமைகள் போல் திரிந்து கொண்டிருப்பவர்கள் எல்லாம் யோகிகள் அல்ல. நான்தான் குரு. திருமூர்த்திகளும் நானே என்று கூறுவார்கள் சிலர். இவர்களைப் போன்றவர்கள் பிழைப்புக்காக பல்வேறு வேடம் அணிந்து திரிவார்கள். சிலர், சடை, புலித்தோல், காவியாடையெல்லாம் தரித்துக்கொண்டு உடல் முழுவதும் சாம்பலைப் பூசிக் கொண்டு உலகத்தில் நாங்கள் தான் யோகிகள்; நாங்கள்தான் ஞானிகள் என்றெல்லாம் கூறவார்கள். இவர்களில் எவரும் யோகிகளும் அல்லர்; ஞானிகளும் அல்லர். இத்தகையோர்களையெல்லாம் நம்பி ஏமாற வேண்டாம்.

**சமாதிகூடிய இடம்:**

*வன்மீகர் கிட்டத்தட்ட 15 நூற்றாண்டுகளுக்கு முன்பு நாகைப் பட்டினத்திற்குத் தென்மேற்கில் சுமார் 20 கி. மீ. தொலைவில் உள்ள எட்டுக்குடி என்ற சிற்றூரில் சமாதி பூண்டுள்ளார். பிற்காலத்தில் முத்தரசு சோழன் என்ற சோழ மன்னன் இப்பகுதியை ஆண்டுவந்த காலத்தில் சில்ப முனிவர் என்ற மகாசில்பி மூன்று தலங்களில் ஒரே மாதிரி வடிவுடைய மூன்று முருகன் சிலைகளைச் செதுக்கினார். சிக்கல் (பொருள் வைத்த சேரி), எட்டுக்குடி, என்கண் என்பவை அந்தத் தலங்களாகும். அவைகளில் எட்டுக்குடி முருகன் திருக்கோவிலின் சுற்றுப்பிரகாரத்தில் மகாசித்தர் வன்மீக முனிவரின் ஜீவ சமாதி உள்ளது. இத்திருக் கோவிலுக்குச் சென்றுவர திருவாரூரிலிருந்தும், நாகையிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.*

# 5. மகா சித்தர் காகபுசுண்டர்

**முன்னுரை**

*"காணாத காட்சியெல்லாம் கண்ணில் கண்டு*
*காகமடா புசுண்டரென்று பேரும் பெற்றேன்"*

*- காகபுசுண்டர்ஞானம், பாடல் 64*

*இவ்வாறு புசுண்டர் காகத்தின் வடிவில் இருந்து கொண்டு எண்ணற்ற காட்சிகளைக் கண்டுள்ளதாகக் கூறியுள்ளார். தான் எத்தனையோ யுகங்கள் காகத்தின் உருவில் கல்லால மரத்தில் வாழ்ந்திருந்ததாக வசிஷ்டரிடம் கூறியுள்ளார். (காகபுஜண்டர் பெருநூல்காவியம் பாடல் 3)*

**காக உருபெற்ற வரலாறு**

*புசுண்டர் ஆரம்பத்திலிருந்தே காக உருவில் இருந்ததில்லை. ஆரம்பத்தில் மனிதப் பிறவி எடுத்து வாழ்ந்திருக்கிறார். ஒரு பிறவியில் மகாகாலரின் சாபத்தின் விளைவாக விந்திய மலையில் மலைப்பாம்பாகப் பல பிறவிகள் எடுத்து வாழ்ந்திருக்கிறார். கடைசியாக ஒரு பிராமணச் சிறுவனாகப் பிறவி எடுத்தார். வர ரிஷியின் சாபத்தால் சந்திர குலம் விளங்க பங்குனி மாதம் உத்திரம் நட்சத்திரம் 2ஆம் பாதத்தில் (கன்னி ராசியில்) ஒரு வெள்ளாட்டியின் மகனாக (விதவையின் மகனாக)ப் பிறந்தார் என்று போகர் கூறுகிறார்.*

***(போகர் 7000/பாடல்கள் 5888, 5889).***

அந்தப் பிறவியில் இராமபக்தி மிக்கவராக இருந்திருக்கிறார். இராமரை நேரில் காண வேண்டும் என்ற ஆசையில் மேரு மலைக்குச் சென்று லோமச முனிவரை அணுகி இப்போது என் உள்ளத்தில் எல்லா ஆசைகளும் அறவே அகன்று விட்டன. இராமனின் திருவடி தரிசனம் பெறும் பேறு கிடைக்காதா என்ற ஆசை மட்டும் என் இதயத்தை விட்டு அகலவில்லை. அந்த ஆசை நிறைவேறும் வழிதேடியே உங்களை நாடி வந்தேன்' என்றார்.

ஆனால் லோமச முனிவரோ "பரம்பொருளும் ஆன்மாவும் வேறு வேறல்ல. நீரினின்றும் பிரியாத அலைகளைப் போல பரமாத்மாவாகிய பெருங்கடலின் அலைகளாகவே மனித ஆத்மாக்களாகிய நாமும் உள்ளோம்" என்று உபதேசம் செய்தார். புசுண்டரோ அந்த பெறுதற்கரிய உபதேசத்தை ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் இல்லை. அதனால் மிகவும் கோபமடைந்த லோமச முனிவர்,

"ஏ, பிராமண மூடனே! காகத்தைப் போல் எல்லாவற்றுக்கும் அஞ்சுகிறாய். கூவி அழைத்து உணவு தருபவரைக்கூட கண்டு அஞ்சி ஓடும் காகத்திற்கும் உனக்கும் வேறுபாடில்லை. எனவே நீ காகமாக மாறக்கடவாய்", என்று சாபம் கொடுத்தார். சாபத்தினால் காகமாக மாறிய புசுண்டர் இராமபிரானையே மனதில் நினைத்தபடி விண்ணில் பறந்தார். அவருடைய ஆழ்ந்த இராமபக்தியைப் பாராட்டி லோமச முனிவர் அவருக்கு உன்னதமான இராம மந்திரத்தை உபதேசித்தார். அதுமுதல் புசுண்டர் காகவடிவிலேயே பல யுகங்களாக இராம மந்திர ஜபம் செய்துகொண்டு காகபுஜங்டர் என்ற திருநாமத்தோடு வாழ்ந்துவருகிறார்.

**இவர் பிறப்புபற்றி மற்றும் ஒரு கதை:**

போகர் கூற்றுக்கு மாறாக புசுண்டரின் பிறப்புப் பற்றி சித்தர்களிடையே வேறு ஒரு கதையும் இருந்து வந்திருக்கிறது. அதன் விபரம்:

ஒரு யுக அந்தத்தில் யானை, ஒட்டகம், கரடி முதலான பல்வேறுபட்ட முகங்களை உடைய சிவ கணங்களுடன் அஷ்ட சக்திகளும் சிவனார் கட்டளைக்கிணங்க மதுவருந்தி நடித்து விழாக்கொண்டாடினர். அவர்களின் வாகனங்களாகிய அன்னங்களும் மது வருந்திக்களித்திருந்தன. ஆதிசக்தியான பிரம்ம சக்தியின் வாகனங்களாகிய பெண் அன்னங்கள் சண்டன் என்னும் வாயசத்தைக் கூடிக் கருத்தரித்து மானதசரசின் கரையில் 21 முட்டைகள் இட்டன. அப்போது பிரம்ம சக்தி தவம் பூண்டு நீண்டகாலம் சமாதியில் இருந்தார். அந்த 21 முட்டைகளிலிருந்து புசுண்டர் முதலான இருபத்தொருவர் வெளிப்பட்டனர். சமாதி கலைந்த பிராமியிடமிருந்து ஞானம்பெற்று அந்த இருபத்து ஒருவரும் தங்கள் தந்தையாகிய சண்டனை அடைந்தனர். சண்டன் அவர்களை மரணமிலா வாழ்வு பெற்று கற்பக மரத்தில் வாழ்ந்திருக்கும்படி செய்தான். பல யுகங்களுக்குப் பிறகு புசுண்டர் நீங்கலாக மற்ற 20 ஞானிகளும் உடலை நீத்து முக்தி அடைந்தனர். புசுண்டர் மட்டும் தன் தேகத்தை காத்து கற்பக நிழலில் வசித்து வந்தார். அக்காலத்தில் வசிஷ்டர் தமது எட்டாம் பிறப்பில் அவரிடம் வந்து உரையாடினார் என்று ஞான வாசிஷ்டம் கூறுகிறது. புசுண்டர் அன்னத்தின் மூலமாக பிறந்தார் என்பதை சுகப் பிரம்ம மகரிஷி தம் ஞான சூத்திரம் 32 ஆம் பாடலில் உறுதி செய்துள்ளார்.

**புசுண்டர் பற்றிய பொதுக் கருத்துக்கள்:**

*புசுண்டர் தமிழ் இனத்தைச் சேர்ந்தவர். பல யுகங்கள் வாழ்ந்தவர். சோதிடம் மருத்துவம், யோகம், ஞானம், ஆகிய துறைகளில் நற்றமிழில் எட்டு நூல்கள் இயற்றியுள்ளார். மரணமிலாப் பெருவாழ்வு வாழ்பவர். பிரளயகாலத்தில் அவிட்ட நட்சத்திரப்பதவியில் வாழ்பவர். பிரளயகாலம் முடிந்தவுடன் பூமிக்கு வந்து பிற சித்தர்களுடன் வாழ்பவர். வசிஷ்ட மகரிஷிக்கு ஞானோபதேசம் செய்தவர். "மாசிலா மனமே மகேசனின் மாளிகை' என்று ஞானப் பாடல் பாடியவர். இவர் உரோம ரிஷியின் குருநாதர். இச்செய்தி காகபுசுண்டர் நாடியிலும் வந்திருக்கிறது.*

**அவருடைய பிரளயகால அனுபவங்கள்:**

*ஒரு பிரளய காலத்தின் முடிவில் பிரம்ம தேவரைப் பார்த்து இருபத்தோராவது பிரம்மாவே வருக! வருக! என்று வரவேற்றாராம். "நான் அறிய சிவன் முப்புரங்களை மூன்று முறை எரித்துள்ளார். தட்சன் யாகத்தை இருமுறை அழித்துள்ளார். திருமால், இராமன் என்னும் பெயரில் பதினோராவது முறையாக இப்போது பிறக்க விருக்கிறார். அவரே சிலகாலம் கழித்து வாசுதேவன் இல்லத்தில் கிருஷ்ணனாக பதினாறாவது முறை அவதரிக்கவுள்ளார்" என்று தான் பார்த்து வரும் யுக மாற்றங்களைப் பற்றிக் கூறியுள்ளார்.*

**காக புசுண்டரின் மெய்ஞ்ஞான விளக்கம்:**

*காகபுசுண்டர் அண்டத்தின் உச்சியில் மனதைச் செலுத்தி கற்பகோடி காலங்கள் வாழ்ந்தவர். இதுவரை ஏழு லட்சம் பிரளயங்கள் வந்துள்ளன என்று உலகத்தோற்ற ஒடுக்கம் பற்றி கேட்ட சிவனாருக்கு உண்மை நிலையைப் புரிய வைத்தவர். "ஆதி என்ற சித்தருக்கும் ஆதியாக இருந்தமையால் சிவனார் கயிலையில் இருக்கும்படி கூற அதன்படி காக உருவத்தில் கைலையில் இருந்தவர்.*

மும்மூர்த்திகளின் ஏழு பிறப்புகளையும் தான் வாழும் காலத்திலேயே கண்டவர். பிறப்பு இறப்புகளைக் கடந்தவர். காக வடிவுடன் இருந்துகொண்டு காரண காரியங்களுக்கும் உரிய மூலத்தைக் கண்டவர்"

*-(காகபுகண்டர் ஞானம் = பாடல்கள் 4, 8, 49, 50)*

"யாகோபு வைத்திய வாத சூத்திரம் 400" என்ற நூலில் மேற்கண்ட வரலாற்று நிகழ்ச்சிகளை காக புசுண்டர் கூற தாமே நேரில் கேட்டதாக இராம தேவர் கூறியுள்ளார்.

காகபுசுண்டர் மேலே கண்ட தம் மெய்ஞ்ஞான விளக்க நூலில் மௌனத்தின் மேன்மை, சமாதி முறைகள், பிரம்மத்தை அடைதல், வாசியோகம், காயகல்பமுறை ஆகியவற்றையும் விளக்கிக் கூறியுள்ளார். அவர் மெய்ஞ்ஞான விளக்கத்துடன் வேறு பல நூல்களும் எழுதியுள்ளார். 'உபநிடதம்" தத்துவ உண்மைகளை விளக்கும் நூல். 'ஞானக் குறள்' ஆன்மா பிரம்மத்துடன் கலக்கும் நிலையை உணர்த்துகிறது.

## காகபுசுண்டர் சமாதி (தென் பொன்பரப்பி)

காகபுசுண்டரும் அவர் மனைவி பகுளாதேவியும் கள்ளக்குறிச்சி மாவட்டம் தென்பொன்பரப்பி கிராமத்தில் உள்ள சுவர்ணாம்பிகை உடனுறை சுவர்ணபுரீஸ்வரர் ஆலயத்தின் பக்கத்தில், கோவிலின் ஈசான்ய மூலையில் சமாதி கொண்டுள்ளனர்.

ஸ்வர்ணபுரீஸ்வரர் கோவிலின் சிவலிங்கம் காக புசுண்டராலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்த சிவலிங்கம் ஐந்தரை அடி உயரத்திற்குக் காந்தத் தன்மை கொண்ட ஒரே அடி கல்லினால் ஆனது. இந்த லிங்க அமைப்பு நவபாஷாணக் கட்டமைப்புக்கு ஒப்பானது. இந்த லிங்கத்தைக் கைகளால் தட்டிப் பார்த்தால் அடிபீடமான பிரம்மபாகம், மத்தியபாகமான விஷ்ணு

பீடம், மேலே உள்ள ருத்ர பாகமான சிவலிங்கம் ஆகிய மூன்று பகுதிகளுமே பதினாறு முகங்களைக் கொண்டவை.

சிவதரிசனம் பெற காகபுசுண்டர் இங்கு 16 ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். அக்கால முடிவில் ஒரு நாள் பிரதோஷ காலத்தில் சிவபெருமான் 16 முகங்களைக் கொண்ட சிவலிங்க மாகக் காட்சி கொடுத்தார். அதன் நினைவாகவே புசுண்டர் இங்கு இந்த ஷோடச லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்ததாகவும் இப்போது கோவில் அமைந்துள்ள அந்த இடத்திலேயே அவர் ஜீவ சமாதி அடைந்துள்ளதாகவும் சித்தர் வரலாறு கூறுகிறது. அவர் சமாதி அடைந்த சிறிது காலத்திற்குப் பிறகு கி. பி. ஏழாம் நூற்றாண்டில் பொன்பரப்பியை ஆண்ட மன்னனாகிய வானகோவராயம் அங்கு ஆலயத்தை எழுப்பினான்.

இந்த ஆலயம் சித்தர் நெறி அடிப்படையில் பல்வேறு தனிச்சிறப்புகளைக் கொண்டது. இங்குள்ள சிவலிங்கம் சிறிது காலம் ஆழ்ந்து வழிபட்டாலே பக்தர்களை தியான நிலைக்குக் கொண்டு செல்ல வல்லது.

சிவலிங்கம் அமைந்துள்ள கருவறை எப்போதும் உக்கிரமாகவே உள்ளது. கருவறையில் எரிந்து கொண்டிருக்கும் தீபம் இடைவிடாது துடித்துக் கொண்டே இருக்கும். இதுபற்றிய விளக்கம் காகபுசுண்டர் நாடியிலும் உள்ளது. இது தென் தமிழ்நாட்டின் பஞ்ச பூதத் தலங்களில் வாயுத்தலமாகும்.

இக்கோவிலில் உள்ள நந்தி இளங்கன்றுபோலவும் சிவலிங்கத்திற்கு நேர் எதிரில் சிவனையே பார்த்துக் கொண்டிருப்பது போலவும் அமைந்துள்ளது. இந்த நந்தி - லிங்க ஒருங்கிணைப்பு ஜீவ சமாதி அடைந்துள்ள சித்தர்களின் வாசி ஓட்டத்தை நுட்பமாக உணர்த்தும் வண்ணம் உள்ளது. இந்த நந்தீஸ்வரருக்கு அபிஷேகம் செய்யும்போது அபிஷேகப்

பொருட்கள் யாவுமே நீல நிறமாக மாறி காட்சி அளிப்பது ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இத்திருக்கோயில் சென்னை - சேலம் நெடுஞ்சாலையில், ஆத்தூர் - கள்ளக்குறிச்சி வழித்தடத்தில் அம்மையகரம் பேருந்து நிலையத்திலிருந்து மேற்கே ஒரு கி. மீ தொலைவிலுள்ளது.

**காகபுசுண்டர் முக்தி அடைந்த ஆச்சாள்புரம்**

கயிலை நாதரின் ஆணையின்படி காக புசுண்டர் ஆச்சாள்புரம் வந்து 'திருவெண்ணீற்று உமையம்மை உடனுறை சிவலோக தியாகராஜர் திருக்கோவிலை அடைந்து அந்தக் கோவிலினுள் நிருதி திக்கில் அமர்ந்து தவமியற்றி வந்தார். திரு ஞான சம்பந்தர் திருமண நாளான வைகாசி மாதம் மூல நட்சத்திரத்தன்று வெளிப்பட்ட சிவ ஜோதியில் திருமணத்திற்கு வந்திருந்த எல்லா சிவ பக்தர்களுடனும் சேர்ந்த காகபுசுண்டரும் முக்தி அடைந்தார்.

இத்திருக்கோவிலில் காக புசுண்டர் காகத்தின் முகமும் ஜடாமுடியும் கொண்டு தவயோகத்தில் பத்மாசனத்தில் அமர்ந்த நிலையில் இருந்து இன்றும் காட்சியளித்தவண்ணம் அருளாட்சி செய்து வருகிறார். (இந்தத் திருத்தலம் சீர்காழியிலிருந்து மகேந்திரப் பள்ளி செல்லும் வழியில் 13 கி. மீ. தூரத்திலும் சிதம்பரத்திலிருந்து 12 கி. மீ தூரத்திலும் உள்ளது)

**அவர் தம் ஞானப்படலில்.**

"மாசிலாமனமே மகேசனின் மாளிகை' என்று கூறியுள்ளதற்கிணங்க நாமும் களங்கமில்லா பளிங்கு போன்று தெளிந்த மனநிலயில் அவரை பக்தியுடன் அழைத்தால் இந்தத் தலைமை சித்தர் ,நம்முடைய ஞானக்கண்ணிலும் (ஆக்ஞைமையத்திலும்) காட்சி கொடுத்தருள்வார் என்பது சத்தியத்திலும் சத்தியம். ஓம் தத் சத்.

ஓம் தத் சத்

# 6. கருவூர்த்தேவர்

## கருவூரார் பிறப்பும் மரபும்

*"சீரான கருவூரார் பிறந்த நேர்மை*
*செப்புகிறேன் செம்பவளவாயால் கேளீர்*
*கூறான சித்திரையாம் மாதமப்பா*
*குறிப்பான அஸ்தமதிரண்டாங்காலாம்*
*தேரான நாள்தனிலே பிறந்தசித்து*
*தேற்றமுடன் கருவூரார் என்னலாமே*

**- போகர் 7000 / 5890**

மேலே காணும் போகர் கூற்றுப்படி கருவூரார் சித்திரைமாதம் அஸ்த நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் கன்னி ராசியில் பிறந்தவர்.

*"ஆமேதான் தேவதச்சன் என்று சொல்லி*
*அப்பனேஅவன் மைந்தன் மயன் என்பார்கள்*
*நாமேதான் சொன்னபடி மயனுக்கல்லோ*
*நாடான கருவூராத் பிறந்தாரல்லோ*

**- போகர் 7000 / 5891**

இதன்படி விஸ்வகர்மாவாகிய தேவதச்சனுடைய மகனான மயனின்மைந்தன் கருவூரார் என்கிறார் போகர். சாத்திரங்களின்படி மயன் விண்ணுலகில் பல யுகங்களாக வாழ்ந்துவரும் தேவதச்சன். கருவூரார் இக்கலியுகத்திலே தமிழ் மண்ணில் தச்சர் குலத்தில்

பிறந்தவராதலால் அவர் மயனின் மரபில் தோன்றியவர் என்பதே பொருத்தமாகும். இதே பாடலில் மேலும் போகர் "உலோக சிற்பத்தொழிலில் அந்த தேவதச்சனாகிய மயன் ,கூட கருவூராருக்கு இணையாக மாட்டார்" என்கிறார் .

"கோனான கன்னார ஜாதியாகும்
கொற்றவனே நூல்தனிலே கண்டவாறு"

- போகர் 7000 / 5705

என்றபடி கருவூரார் விஸ்வகர்மா மரபில் கன்னார குலத்தில் பிறந்தவர் என்பது உறுதிப்படுகிறது

**கருவூராரின் பெற்றோரும் தொழிலும்**

அகத்தியர் 12000 / 451 இல் உள்ளபடி கருவூராரின் பெற்றோர்கள் ஊர் ஊராகச் சென்று ஆங்காங்குள்ள கோவில்களுக்கு செம்பு முதலான தாழ்ந்த உலோகங்களில் சிலைகள் செய்து கொடுத்து வாழ்ந்து வந்தனர். அப்படி சம்பாதித்த பொருள்களைக் கொண்டு எட்டு திசைகளிலும் புகழ் பரப்பி வாழும் முனிவர்களுக்கும், சித்தர்களுக்கும் தேவையானவைகளை வாங்கிக் கொடுத்து வந்தார்கள்.

'பெற்றோர்கள் செய்த புண்ணியம் பிள்ளைகளைச் சேரும்' என்ற பழமொழிக்கிணங்க அந்த மெய்ஞ்ஞானிகள் கருவூராருக்கு ஞானப்பால் ஊட்டினர். குழந்தைப் பருவத்திலேயே கருவூரார் மகா சித்தர்களுக்குரிய தகுதிகளுடன் உருவாகி வளர்ந்து வந்தார்.

-அகத்தியர் 12000 / 454

பெற்றோர்களைப் போல் கருவூராரும் பாரதத்தின் நான்கு திசைகளிலும் உள்ள எண்ணற்ற கோவில்களுக்குச் சென்று அந்தந்த

கோவில்களுக்குத் தேவையான உலோகச் சிலைகளைச் செந்தூரம் சேர்த்து செய்து கொடுத்து வந்தார். அவைகள் யாவும் தங்கச் சிலைகள் போலவே இருந்தன.

*அகத்தியர் 12000 / 466*

**கருவூரார் வாழ்ந்த காலம்**

*"பாடுவேன் பலசந்தங்கள் சிந்ததுவாய்*
*நாடுவேன் இனி நற்குரு பாதத்தை*
*தேடுவேன் இனி சிந்தை மகிழ்வொடு*
*கூடுவேன் குரு போகர்தன் பாதமே."*

*- கருவூரார் வாதகாவியம் 700 / 4*

இந்த பாடலில் கருவூரார் "ஆரம்பகாலத்தில் நான் இறைவனை சந்தங்கள் நிறைந்த சிந்து பாடல்கள் பாடி வழிபட்டு வந்திருக்கிறேன். ஒரு குறிப்பிட்ட காலத்தில் நான் ஒரு நற்குரு பாதத்தைத் தேடினேன். எனக்கு போகசித்தரே குருவாக அமைந்துவிட்டார். இனி நான் அவர் பாதங்களைப் பணிந்து அவர் வழியில் செல்வேன்" என்று கூறுகிறார். இதனால் 'திருவிசைப்பா' பாடிய கருவூராரும் சுமாராக நானூறு ஆண்டுகளுக்குப் பிறகு தஞ்சைப் பிரகதீசுவரர் ஆலயத்தில் லிங்கப் பிரதிஷ்டை செய்த கருவூராரும் காலத்தால் மாறுபட்டிருந்தாலும் ஒருவரே என்பது தெளிவு. தமிழக சித்தர்கள் காயகல்ப முறையைப் பயன்படுத்தி நீண்டகாலம் வாழ்ந்தவர்கள் என்பது தமிழ் உலகம் அறிந்த உண்மை.

*"காசினியில் யான் கொண்ட கற்பம் கேளாய்*
*கடிதாக நாற்பத்தோர் கற்பமாகும்*
*நேசமுடன் சித்தியாம் கற்பம் கொண்டால்*
*நிலை பெற்றேன் ஆகாச நிலைகள் பெற்றேன்"*

என்று 'நொண்டி என்னும் வாதகாவியம் 700' என்ற நூலில் கருவூராரே கூறியுள்ளபடியாலும் அவர் நாற்பத்தொரு கற்பம் வாழ்ந்திருக்கக் கூடும் என்று நம்பமுடிகிறது. இவைகளை யெல்லாம் ஒருங்கிணைத்துப பார்த்தால் கருவூரார் கி. பி. 5 ஆம் நூற்றாண்டு முதல் 12 ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலம் வரை சுமார் 700 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார் என்ற முடிவுக்கே வரவேண்டியுள்ளது.

சைவத்திருமுறைகளில் 9ஆம் திருமுறையில் கருவூரார் பாடி இருப்பதாகக் காணப்படும் பத்து பதிகங்களில் மூன்றாவது பதிகம் நீங்கலாக மற்ற ஒன்பது பதிகங்களின் இறுதியிலும் தன்னைக் கருவூரான், கருவூரானேன் என்றே குறிப்பிட்டுள்ளார். தான் கருவூரில் பிறந்ததாலோ அல்லது வாழ்ந்ததாலோ தன்னைத் தன் ஊரின் பெயரால் வெளிப்படுத்திக் கொண்டார் என்பது இதன்மூலம் தெரிகிறது. இது நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்கு முற்பட்ட நிலை.

சித்தர் ஞானக் கோவையில் வரும் 'கருவூரார் பூஜாவிதி' பாடல்கள் பெரிதும் சித்தர்களின் நிலைகளையே விளக்குகின்றன. இந்த 'கருவூரார் பூஜாவிதி'யை இயற்றிய பிற்காலத்தில் தன்னை 'போக முனி அருளால் வந்த பாலன்' என்று கூறிக்கொள்வதாலும், தான் நீண்டகாலம் (41 கற்பகாலம்) வாழ்ந்த தாகக் கூறியுள்ளதாலும் அவர் போகரின் சீடராகி இந்த நெறியில் உயர்ந்த நிலையை அடைந்திருக்கிறார் என்றும் சித்தராக நீண்டகாலம் வாழ்ந்து இருக்கிறார் என்றும் தெரிகிறது.

சித்தர்களின் வாழ்க்கை வரலாறுகளை ஊன்றிப் பார்க்கும் போது இவர் கி.பி ஐந்தாம் நூற்றாண்டு முதல் 12 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி - வரை சுமாராக 700 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார். இவர் சித்தராக மாறிய பிறகு எண்ணற்ற அற்புதங்களைச் செய்து முடித்து

விட்டு சிவத்துடன் கலந்து விட்டார். இனி வருபவை அவர் இயற்றிய அற்புதங்களும் சித்தியும் ஆகும்.

### திருக்குகூரில் நிகழ்ந்தது

சித்தன் போக்கு சிவன் போக்கு என்பதற்கிணங்க கருவூரார் நடந்துகொண்டே பாண்டிய நாட்டின் தாமிரபரணி நதிக் கரையில் உள்ள வைணவத்தலமான திருக்குரு கூரைச் சென்றடைந்தார். அவர் அங்கு செல்லும் முன்பே திருமால் தன் அடியார்களின் கனவில் தோன்றி சித்தரை எதிர் சென்றழைத்து அவரை நன் முறையில் உபசரிக்கும்படி கட்டளையிட்டார். அதன்படி திருக்குருகூர் வைணவப் பெரியார்களின் உபசரிப்புடன் கருவூரார் திருக்குருகூர் மாலவனை தரிசித்து விட்டுத் தன் திருத்தல யாத்திரையைத் தொடர்ந்தார்.

### கஜேந்திர மோட்சம் என்னும் தல நிகழ்ச்சி

கஜேந்திர மோட்சத்தை அடைந்தவுடன் அத்தலப் பெருமாளான முன்றீசரை வணங்கிகள் வேண்டும் என்று கேட்டார் முனறீசர் காளிக்குக் கட்டளையிட காளி ஒரு மதுக் குடத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். தொடர்ந்து அங்கிருந்த கர்ம யோகிகளைப் பார்த்து 'மீன் கொண்டு வாருங்கள்' என்றார். அவர்கள் எங்கு தேடியும் மீன் கிடைக்கவில்லை. உடனே அங்கிருந்த வன்னி மரத்தை நோக்கி 'மீன் மாரி பொழிக', என அம்மரத்தின் மேலிருந்து ஏராளமான மீன்கள் கொட்டின. அவர்கள் 'எங்களுக்கு முக்தி அருளவேண்டும்' என வேண்ட அவர்களைப் பொதிகை மலைக்கு வரும்படிக் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டு வேறு ஒரு பெருமாள் கோவிலுக்குச் சென்று கோவிலின் முன் நின்று பெருமாளைக் கூவி அழைத்தார். உடனே பெருமாள் வராததால் சித்தர் 'பெருமாள் இல்லாத இக்

கோவிலில் பூசையும் இல்லாதிருக்கட்டும்' என்று சபித்துவிட்டு திருக்குற்றாலம்சென்று குற்றால நாதரை தரிசித்து விட்டு பொதிகை மலையை அடைந்தார். அங்கு அகத்திய முனிவரை தரிசித்துவிட்டு முன்னரே அங்கு வந்து காத்திருந்த கர்ம யோகிகளுக்கு முக்தி யளித்து விட்டுத் திருநெல்வேலியைச் சென்றடைந்தார்.

## திருநெல்வேலியில் நிகழ்ந்தது

திருநெல்வேலியில் நெல்லையப்பர் கோவிலின் முன்நின்று நெல்லையப்பரை அழைத்தார். அப்போது மூலவருக்கு நைவேத்திய தீபாராதனைகள் நடந்து கொண்டிருந்ததால் உடனே சுவாமி வெளி வரவில்லை. அதனால் வெகுண்ட சித்தர் இங்கு இறைவன் இல்லையா என்று கேட்டுவிட்டு அங்கிருந்து அகன்றார். அதற்குள் கோவில் முழுவதும் எருக்கு முளைத்துப் புதராய் மண்டிவிட்டது. நெல்லையப்பர் சித்தரைத் துரத்திச் சென்று மானூரில் தரிசனம் தந்து மீண்டும் திருநெல்வேலிக்கு அழைத்து வந்தார். கருவூரார் காலடி பட்டதுமே கோயில் வளாகம் முழுவதும் மண்டியிருந்த எருக்கன் செடிகள் மறைந்து கோவில் வளாகமே மலர்வனமாக மாறியது. சித்தர் திருநெல்வேலியிலிருந்து திருவிடை மருதூர் சென்று மகாலிங்கேஸ்வரரை தரிசித்து விட்டு மேலும் பயணத்தைத் தொடர்ந்தார்.

## தஞ்சையில் நிகழ்ந்தது

தஞ்சைப் பெரிய கோவிலில் சிவ லிங்கத்தைப் பிரஷ்டைசெய்ய சிலாசிற்பிகளால் முடிய வில்லை. பிரதிஷ்டை செய்வதற்கான மருந்து கெட்டிப்படாமல் இளகிய நிலையிலேயே இருந்தது. அதனால் கோவிலுக்கு குட முழுக்கு செய்யமுடியாமல் இராஜராஜ சோழமன்னன் தவித்துக்கொண்டிருந்தான். அப்போது கருவூர் சித்தர் ஒருவரால்தான் இந்த லிங்கப் பிரதிஷ்டை செய்ய முடியும்

என்று அசரீரி ஒலித்தது. அப்போது உருமாறி அங்குள்ள கூட்டத்தில் இருந்த போகநாதர், "தஞ்சைப் பெரிய கோவிலுக்கு வா" என்று சீட்டெழுதி அதை ஒரு காக்கையின் காலில் கட்டி அனுப்பி கருவூர்த் தேவர வரவழைத்தார். அங்கு வந்த கருவூரார், போகர் முதலியோரின் அனுமதி பெற்று ஆவுடையுடன் சிவலிங்கத்தைச் சேர்த்து நிறுத்தி பந்தனம் செய்து வலிமையாகச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து யாவரையும் மகிழ்வித்தார். அதைத் தொடர்ந்து பல்லாயிரம் பேருக்கு சமைத்து வைக்கப்பட்டிருந்த உணவு முழுவதையும் தாமே உண்டு அனைவரின் வயிறும் நிரம்புமாறு செய்தார்.

**திருவரங்கத்தில் நிகழ்ந்தது:**

தஞ்சையிலிருந்து திருவானைக்கா சென்று ஜம்புலிங் கேஸ்வரரை வழிபட்டு திருவரங்கம் சென்றார். அங்கே தாசி கோமளவள்ளி என்ற பொது மடந்தை அவருடைய திவ்யமான உடலழகைக்கண்டு அவர்மீது அதிமோகம் கொண்டாள். அவள் தன் விரக நிலையை அவருக்கு உணர்த்தவே அவரும் அதற்கு உடன்பட்டு அவளுடன் இரண்டு நாள் தங்கி அவளை மோகனச் சிறையில் அடைபட்டு மயங்கி இருக்கச் செய்தார். இரண்டாம் நாள் அதிகாலையில் அரங்க நாதரிடமிருந்து ஒரு இரத்தினமாலையைப் பெற்று அவளுக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டு விடைபெற்றார். பிரிவாற்றாமையால் வருந்திய அப்பெண்ணிடம் 'வருந்தாதே' நீ நினைக்கும்போதெல்லாம் நான் வந்துவிடுவேன்" என்று கூறி விடை பெற்றுச் சென்றார்.

பொழுதுவிடிந்தவுடன் அரங்கநாதர் கழுத்தை அலங்கரித்த இரத்தினமாலையைக் காணாத அர்ச்சகர் அவள் அதை அணிந்திருக்கக் கண்டார். இது உனக்கு யாரால் கொடுக்கப்பட்டது

என்று அவளைக் கேட்க அவள் கருவூராரை நினைக்க, அவள் நினைத்த மாத்திரத்தில் கருவூரார் அங்கு பிரசன்னமாகி 'இதனைத் திருவரங்கன் எனக்குக் கொடுக்க யான் இதை இவளுக்குக் கொடுத்தேன்' என்றார். கோவிலார் அதை நம்பாததால் திருமாலே அசரீரியாக ஆகாயத்தில் தோன்றி, 'இதை யாமே இவருக்குக் கொடுத்தோம்' என்று கூறினார். கோவிலார் அனைவரும் சித்தர்பாதம் பணிந்து மன்னிப்பு பெற. கருவூர் சித்தர் அவ்விடம் விட்டகன்றார்.

**சிலை செய்து கொடுத்து சிறையில் அடைபடல்:**

பின் ஒரு சமயம் ஒரு சோழ மன்னன் தன் கனவில் நடராஜரின் திவ்ய தரிசனம் பெற்றான். தான் கனவில் கண்ட அதே சிலையை உண்மையிலேயே செய்து முடிக்க முடிவு செய்தான். உலோக வேலைப்பாட்டில் சிறந்த பல சிற்பிகளை அழைத்து வேண்டிய அளவு பொன்களை அவர்களிடம் கொடுத்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் அச்சிலையைச் செய்து முடிக்கவேண்டும் என்று அரசாணை பிறப்பித்தான்.

சிற்பிகள் பொன்னை உருக்கி சிலை செய்ய முயன்றார்கள். பலமுறை முயன்றும் வார்ப்புகள் உடைந்து கொண்டே இருந்தன. மன்னன் வைத்த கெடு முடியும் நாள் வந்துவிட்டது. தங்களால் சிலை செய்யமுடியாததால் தாங்கள் அனைவரும் கழுவேற்றப்படுவது உறுதி என்று முடிவுசெய்து அந்த சிற்பிகள் 'திக்கற்ற எங்களுக்கு நீயே துணை என்று இறைவனை வேண்டி மனம் உருகி நின்றனர். அப்போது அங்கே வந்த கருவூரார் "நீங்கள் யாவரும் சிறிது நேரம் வெளியில் போய் இருங்கள்; நான் சிலையை வார்த்துத் தருகிறேன்' என்று கூறி சிற்பிகளை வெளியேற்றி விட்டு தங்கத்தை உருக்கி அதில் ஒரு துளி செந்தூரத்தைச் சேர்த்து அச்சில் வார்த்தார். 'அற்புதம்,

அற்புதம்' என்று யாவரும் பாராட்டும் வண்ணம் நடராஜர்சிலை அமைந்திருந்தது.

மறுநாள் காலையில் வந்து சிலையைப் பார்த்த மன்னன் தங்கத்தின் நிறம் குறைந்திருந்ததைக்கண்டு சிற்பிகளைப் பார்த்து 'தங்கத்தை திருடிக்கொண்டு செம்பால் சிலை செய்து என்னை ஏமாற்றிவிட்டீர்கள்' என்று கூற சிற்பிகள் கருவூராரைக் காண்பித்து 'இந்த யோகிதான் இச்சிலையைச் செய்தார் என்றார்கள். மன்னன் கருவூராரைச் சிறையில் அடைத்தான்.

ஏழை சிற்பிகளைக் காக்கும் பொருட்டு சிலைசெய்யக் கருவூராரை அனுப்பிய திருமூலர் ஞானத்தால் நடந்தவற்றை அறிந்து அங்கு வந்து அந்த சோழ மன்னனைப் பார்த்து "உனக்குத் தங்கம்தானே வேண்டும். நீ கொடுத்தத் தங்கத்தின் எடைக்குச் சமமாக வெள்ளியைக் கொண்டுவா; அதை நீயே உருக்கு, என்றார். உருக்கிய வெள்ளியில் வீசம் (16 இல் ஒரு பங்கு) செந்தூரத்தைச் சேர்த்தார்.

அந்த வெள்ளி பத்தரை மாற்றுத் தங்கமாக மாறியது. திருமூலர் உடனே மன்னனைப் பார்த்து 'சோழ மன்னா! நீ உன் தங்கத்தை எடுத்துக்கொண்டு போ' என்றார்.

(இந்தச் செய்தி 'கொங்கணவர் வாதகாவியம் 798, 799 ஆம் பாடல்களில் இடம்பெற்றுள்ளது. இப்போதுள்ள தில்லை நடராஜர் சிலையே 11-ம் நூற்றாண்டில் கருவூர் சித்தர் வார்த்த சிலை என்ற கருத்தும் உள்ளது)

அடுத்து திருமூலர் 'சோழா! ஆசை என்ற மாய மலையால் நீ மறைக்கப்பட்டுள்ளாய். உன்னால் உண்மையான பரவெளியை உணர முடியவில்லை. உன் ஆசை அகன்றுவிட்டால் உனக்குள் உண்மையான மூலப்பொருள் தெரியும் என்றார்.

இந்த சொற்களால் உள்ஒளி பெற்ற சோழ மன்னன் திருமூலரின் பாதம் பணிந்து அக்கணமே துறவு பூண்டு யோகியானான். இச்செய்தி 'கொங்கணவர் வாத காவியம் 803-ஆம் பாடலில் உள்ளது.

**கருவூர் சித்தர் சிவத்துடன் கலந்தது:**

கருவூரார் ஐந்தாம் நூற்றாண்டில் தொடங்கி 12 ஆம் நூற்றாண்டுவரை சுமார் 700 ஆண்டுகள் வாழ்ந்தவர் எனக்கண்டோம். இவற்றில் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த சைவ சமய வேத பிராமணர் பலர் இவரது உடலழகையும் துறவு வாழ்க்கையையும் பார்த்து இவர் குல ஒழுக்கம் தவறிய வைதீக பிராமணர் என முடிவு செய்து அக்கால சோழ மன்னனிடம் சென்று "குல ஒழுக்கம் தவறிய இந்த பிராமணரைத் தண்டிக்க வேண்டும் என்று முறையிட்டனர். சோழ மன்னனும் கருவூராரின் தவக்குடிலுக்குச் சென்று பார்வையிட்டான். அங்கு வைதீக கருமங்களுக்குரிய பொருள்கள் மட்டுமே இருக்கக் கண்டு சித்தரிடம் மன்னிப்பு கேட்டான். கருவூரார் "நீங்கள் அந்தப் பிராமணர்களின் வாழ்விடங்களையும் சென்று பாருங்கள் என்றார். அவர் கூறியபடி மன்னன் அவ்விடங்களுக்குச் சென்று பார்க்க அந்தப் பார்ப்பனர்களின் வாழ்விடங்களிலெல்லாம் புலாலும், மீனும், மதுக் குடங்களுமே நிறைந்திருந்தன. அதனால் கோபமுற்ற மன்னன் அந்த வைதீக பிராமணர்கள் அனைவரையும் நாடு கடத்திவிட்டான்.

கடைசியில் அவர்கள் தாங்களே கருவூர் சித்தரை ஒழித்து கட்டுவது என்ற முடிவுக்கு வந்தனர். தக்க ஆயுதங்களுடன் சென்று அம்பிரா நதிக் கரையிலிருந்த அவரைத் துரத்தினர். சித்தரும், தான் பூதவுடலைத் துறக்கும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்தவராய் அருகில் இருந்த பசுபதீஸ்வரர் திருக்கோவிலுள் சென்று மூலவர்

லிங்கத்தைக் கட்டித்தழுவ சோதிமயமாக மாறி சிவலிங்கத்தோடு இரண்டறக் கலந்தார். இந்த வரலாறு கொங்கு மண்டல சதகத்திலும் கருவூரார் பலதிரட்டிலும் இடம் பெற்றுள்ளது.

## முடிவுரை

அவர் இயற்றிய "கருவூரார் பூஜா விதி" என்ற நூலில் அவர் வாலைத் தெய்வத்தை பூசிப்பவர் என்று கூறுகிறார். பொறி புலன்களைக் கட்டுப்படுத்த புத்தியை ஒரு நிலைப்படுத்தி பூஜை செய்ய வேண்டும் என்கிறார். மௌனத்தின் மேன்மையைப் புலப்படுத்தியுள்ளார். ஆதியினை அறிவதால் பெறும் சிறப்பு. போலி சித்தர்களின் இயல்புகள் ஆகியவற்றையும் விளக்கியுள்ளார்.

இவர் கரூர் பசுபதீஸ்வர் ஆலயத்தில் சமாதிபூண்டும் தஞ்சைப் பெருவுடையார் கோவில் பிரகாரத்தில் தனிக்கோவில் கொண்டும் அருளாட்சி செய்து வருகிறார். வியாழக்கிழமைகளில் இவரை வழிபட்டு வருபவர்கள் வளங்கள் எல்லாம் பெற்று நிறைவுடைய நல்வாழ்வையும் பேரின்பப் பேற்றையும் பெறுவர் என்பது உறுதி.

## கருவூராரை வழிபடுவோர் கவனத்திற்கு

கரூர் பசுபதீஸ்வரர் திருக்கோவிலில் தென்புறத்தில் கருவூர் சித்தர் சமாதி உள்ளது. சமாதி மீது கருவூரார் சிலை உள்ளது. கருவூராருக்கு பௌர்ணமிகளில் சிறப்பு பூஜைகள் நடைபெற்று வருகின்றன. இந்தப் பௌர்ணமி பூஜைகளில் கலந்து கொள்பவர்களின் நியாயமான வேண்டுதல்கள் தவறாது நிறைவேறிவருகின்றன.

# 7. ஆயுர்வேதம் கண்ட தன்வந்திரி

**புராண கருத்து**

தன்வந்திரி மகாவிஷ்ணுவின் அவதாரம். தேவர்களும் அசுரர்களும் அமுதத்திற்காக திருப்பாற்கடலைக் கடைந்தபோது அமுத கலசத்துடன் பாற்கடலிலிருந்து வெளிவந்தவர். தேவர்களுக்கு அமுதத்தை வழங்கி அவர்களுக்கு மரணமிலாப் பெருவாழ்வு அளிப்பதற்கென்றே தோன்றியவர். போகர் கண்ட தன்வந்திரி.

"சட்டமுடன் தன்வந்திரி ஜாதிபேதம்
தகமையுள்ள மகாவிஷ்ணு என்னலாகும்
வட்டமுள்ள தலைமுறைகள் முப்பதிரண்டு
வளமுடன் கண்டறிந்த நூலிதாமே"

- போகர் 7000 / 5710 ஆம் பாடல்

"சத்தியுள்ள மகாவிஷ்ணு என்றே சொல்வர்
தாரணியில் மானிடராம் சித்து வாகும்
முத்திபெற ஐப்பசியாம் திங்களப்பா
முனையான புனர்பூசம் நாலாம் காலே.

- போகர் 7000 / 5877 ஆம் பாடல்

போகர் கூற்றுப்படி தன்வந்திரி பூமியில் விஷ்ணு குலத்தில் மானிடராய் பிறந்தவர். இவரை மகாவிஷ்ணுவின் அவதாரம்

என்றும் கூறுவார்கள். இவர் மண்ணுலக மக்கள் நன்மைக்காக முப்பத்திரண்டு தலைமுறைகளில் மீண்டும் மீண்டும் மனிதனாகப் பிறந்து ஆயுர்வேதம் என்ற மருத்துவ நூலைத் தொகுத்து அளித்துள்ளார்.

முதலில் தீர்க்கமர் என்பவரின் மகனாகப் பிறந்து பல வைத்திய நூல்களைத் தந்தருளினார். பிறகு காசி ராஜனின் மகனாகப் பிறந்து சித்தர்கள் பலரிடம் மூன்றுலட்சம் கிரந்தங்களைக் கேட்டறிந்தார். பிறகு சேதுமான் என்ற பெயரோடு தீர்த்த பசு என்ற மன்னரின் மகனாகப் பிறந்து "ஆயுர்வேதம்' என்ற தலைப்பில் மேலும் பல மருத்துவ நூல்களை எழுதினார். இந்தப் பிறப்பில் கனிஷ்க மன்னரின் அவையை அலங்கரித்த சுஸ்ருதர் என்ற மருத்துவமேதைக்கு ஆயுர்வேத மருத்துவ முறையைக் கற்பித்தார். பிறகு அனு என்ற அரசனின் மகனாகப் பிறந்து பராசர முனிவரிடம் பாடங்கள் கற்று "ஆயுர்வேதம்" என்ற வடமொழி நூலை முழுமையாக எழுதி முடித்தார்.

இவைகளையெல்லாம் முழுமையாகத் தொகுத்துப்பார்க்கும் பொழுது தன்வந்திரி 32 தலைமுறைகளில் பல பிறவிகள் எடுத்து நான்கு வேதங்களுக்கும் இணையான ஆயுர்வேதத்தை வடமொழியில் தொகுத்தருளினார் என்பது பெறப்படுகிறது. விஷ்ணு குலத்தவரான இந்த தன்வந்திரி ஸ்ரீரங்கம் அரங்கநாதர் ஆலயத்தில் தனிச்சன்னதி கொண்டு அருளாட்சி செய்துவருகிறார் என்பது வைணவ நெறிகண்டுள்ள தெளிவான முடிவு.

**"ஓம் நமோ பகவதே வாசு தேவாய**
**தன்வந்த்ரயே, அம்ருதகலஸ ஹஸ்தாய,**
**சர்வாமய விநாச னாய, த்ரிலோக்ய நாதாய,**
**ஸ்ரீ மஹா விஷ்ணவே நமஹ".**

என்ற மந்திரத்தை தினமும் 1008 முறை கூறி பக்தியுடன் தன்வந்திரி பகவானை வழிபட்டுவந்தால் உடல் நோய்களும் மன நோய்களும் குணமாகின்றன என்பது அனுபவ பூர்வமான உண்மை.

## அகத்தியர் கண்ட தன்வந்திரி

"அகத்தியர் 12000' என்ற நூலின்படி மகாவிஷ்ணுவே தன்வந்திரி பகவான் என்றும் தமிழ் மக்கள் நோயற்ற நல்வாழ்வை இன்புற்று வாழ வேண்டும் என்ற நோக்கத்தில் தமிழகத்தில் மானிடராய்ப் பிறந்து ஆயுர்வேத வைத்திய சித்தாந்தங்களை யெல்லாம் தமிழ்க் கவிதை வடிவில் தொகுத்துத் தந்துள்ளார் என்றும் தெரிய வருகிறது.

"மாச்ச லென்றதன் வந்திரி வளப்பம் கூறுவேன்
மன்னவனே முற்பிறப்பில் விஷ்ணு என்பார்
பாச்சலுடன் இப்பிறப்பில் தன்வந்திரி தானும்
பலாகனே மானிடராய்ப் பிறந்தார்காணே."

- அகத்தியர் 12000 / 4 / 427

"பூணவே அவர்தாதை தந்தை தாயும்
புகழ்பெறவே காயத்ரி நாமம் கொண்டு
வேணபடி தம்பூரு வீணை கீதம்
வித்தகனார் கையேந்தியாசிர்மங்கள்
தோணவே கரபாத்திரம் கையிலேந்தி
தோற்றமுடன் யாசகங்கள் செய்தார்தானே"

- அகத்தியர் 12000 / 4 / 428

"தரமான சாத்திரத்தின் கியானரூபம்
சதகோடி சூரியர் போல் பிரகாசிக்க
கோமானாம் தன் வந்திரிபாலனுக்கு
கூறியதோர் மூன்று லட்சம் கிரந்தம் தன்னை

*சாமானிய மானதொருபதினெண் பேர்கள்*
*சாற்றினார் உபதேசம் பலவாறாக*
*போமேதான் இதிகாசம் கட்டறுத்து*
*புகட்டினார் தன்வந்திரி பாலனுக்கே.*

*- அகத்தியர் 12000 / 4 / 431*

அகத்தியர் 12000 நூலின்படி தன்வந்திரி முற்பிறப்பில் விஷ்ணுவாக இருந்தவர். இப்பிறப்பில் தன்வந்திரி என்ற பெயரில் மனிதனாய்ப் பிறந்துள்ளார். (இக்கூற்று கடவுளாய் இருந்த மகா விஷ்ணு இப்பிறப்பில் தன்வந்திரி என்ற பெயருடன் ஒரு தமிழ் மகனாய்ப் பிறந்துள்ளார் என்பதை உறுதி செய்கிறது) அவருடைய பாட்டன் முப்பாட்டன்மார்களும், தாய் தந்தையரும் காயத்ரி மந்திரத்தையே வாழ்க்கையின் ஆதாரமாகக் கொண்டு தீவிரபக்தர்களாய் எளிமையான வாழ்க்கை வாழ்ந்துள்ளனர். அவருடைய தந்தை தம்பூரு வீணையைக் கையில் தாங்கி சிறந்த பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டு யாசகம் செய்து குடும்பம் நடத்திவந்தார். (இதிலிருந்து அவர் தந்தை உஞ்சவிருத்தி செய்து வயிறு வளர்த்து வந்த இறைவன் திருவருளுக்குப் பாத்திரரான வைதீக பிராமணர் என்ற உண்மை பெறப்படுகிறது) அவர், சாதாரண மனிதர்களாகப் பிறந்து அஷ்டமா சித்திகளையும் பெற்று ஞானத்தால் உயர்ந்திருந்த பதினெண் சித்தர்களைக் கொண்டு தன்வந்திரிக்கு உபதேசம் செய்வித்து, தன்மகன், உயர்ந்த சித்த சாத்திரங்களையெல்லாம் கற்றுத் தெளிவு பெறச் செய்தார். அதன் விளைவாக தன்வந்திரி இதிகாசங்களில் காணப்படும் அற்புத சித்துக்களை யெல்லாம் கடந்து மூன்று லட்சம் கிரந்தங்களையும் கற்றுத்தெளிந்தார். தன் சாத்திர ஞானச் சிறப்பால் நூறு கோடி சூரியர்களுக்கு இணையாக ஞான ஒளி வீசிவந்தார்.

தமிழ்மொழியில் வைத்திய சிந்தாமணி, வைத்திய காவியம், செயநீர்-50, முப்பு சூத்திரம் போன்ற பல உயர்ந்த வைத்திய நூல்களை எழுதி "ஆயுர்வேதத்தின் தந்தை" என்ற தனிச்சிறப்புடன் வாழ்ந்தார். அவர் நாகை மாவட்டம் வைத்தீஸ்வரன் கோவில் என்ற திருத்தலத்தில் ஜீவ சமாதி பூண்டு இன்றும் வைத்திய நாத சுவாமியாக இருந்து அருளாட்சி செய்து வருகிறார். இத்தலம் நவக்கிரக தோஷப் பரிகாரத்தலங்களுள் செவ்வாய் தோஷப் பரிகாரத் தலமாக விளங்கிவருகிறது.

இத்திருத்தலத்தில்மூலவராக விளங்கும் தன்வந்திரி மகாசித்தரைக் கீழ்க்கண்ட வழிபாட்டுப் பாடலைப்பாடி வணங்கி நாம் யாவரும் உடல்நலமும், மன நலமும் பெற்று பல்லாண்டு காலம் வாழ்ந்து வருவோமாக.

**தன்வந்திரி வழிபாட்டுப் பாடல்:**

விண்ணவரைக் காப்பாற்ற அமுதத்தை ஏந்திவந்தாய்
மண்ணவரை வாழ்விக்க ஆயுர்வேதம் தந்தாய்
வைத்திய நாதனாக வேளூரில் அருள் புரிவாய்
கைகூப்பிதொழும் எமையும் காப்பாய் தன்வந்திரி சித்தே

# 8. மகாசித்தர் காலங்கி நாதர்

**தோற்றம்:**

*காலங்கிநாதர் 3000 ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்திருக்கிறார். (போகர் 7000/5743) இவர் சித்திரைமாதம் அஸ்வினி நட்சத்திரம் நான்காம் பாதத்தில் பிறந்தவர் மயன் சாதியில் விஸ்வ கர்மாவாகத் தோன்றியவர் (போ. ஏ. 5698). திருமூலருக்கு முதன்மையான சீடராயிருக்கும் பெரும் பேறு பெற்றவர். மூன்று யுகங்கள் சமாதி கூடியிருந்தவர். பாரதத்திலிருந்து ககன குளிகையின் உதவியால் விண்வெளியில் சீன நாட்டிற்குச் சென்றவர். (போ. ஏ.5741). சீனாவில் சமாதி கூடியிருந்து மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவர். அடிக்கடி சமாதியிலிருந்து வெளிப்பட்டு சீன நாட்டு பக்தர்களுக்கு தரிசனம் தந்ததுடன் அருளுதவிகளும் செய்து வந்தார்.*

**பெயர்க்காரணம்:**

*இவரது பெயர் காரணம் அரியானூர் கரியபெருமாள் வரலாற்றில் இடம்பெற்றுள்ளது. (அரியானூர் சேலம் மாவட்டத்தில் உள்ளது. கோவில் அரியானூர் பேருந்து நிலையத்திலிருந்து 2 கி.மீ தூரத்தில் கஞ்ச மலை அடிவாரத்தில் காட்டுக்குள் உள்ளது). இந்தப் பெருமாள் வரலாற்றுப்படி இந்த மகாசித்தர் சீனா நாட்டில் உள்ள காலங்கி என்ற ஊரிலிருந்து இந்தியாவுக்குவந்தவர். அதனால் காலங்கிநாதர் என்ற பெயரைப் பெற்றார். பெரும் பாலோர் கூறும் மற்றொரு காரணம். இவர் உடல்*

எலும்பு, தசை, இரத்தம், நரம்பு போன்ற அங்கங்களால் ஆனதல்ல. காற்றையே உடம்பாகக் கொண்டவர் (கால்=காற்று; அங்கி = உடல்) அதனால் காலங்கிநாதர் என்ற காரணப்பெயரைப் பெற்றுள்ளார்.

## தசாவதார சித்தர்கள் தரிசனம்

இந்த உண்மை போகர்சத்தகாண்டம் 7000ல் இடம் பெற்றுள்ளது. திரேதாயுகத்தில் ஒரு சமயம் ஒரு மிகப் பெரிய நீர்ப்பிரளயம் ஏற்பட்டது. மழை வெள்ளத்தில் உலகமே அழிந்துவிடும்போல் இருந்தது. மழை வெள்ளத்தில் பூமியே கொஞ்சம் கொஞ்சமாக மூழ்கிக் கொண்டிருந்தபோது காலங்கிநாதர் ஒரு மலையின் உச்சியை நோக்கி மேலும் மேலும் ஏறிப் போய்க்கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட உயரத்தில் குழுமியிருந்த ரிஷிகள் பலர் இதற்கும் மேலே செல்ல எங்களுக்கு சக்தி இல்லை. வினாடிக்கு வினாடி நீர்மட்டம் உயர்ந்து கொண்டே இருக்கிறது. உன்னால் முடிந்தால் நீ மேலே போய்விடு. என்று கூறினார்கள். மேலே ஏறிச்சென்ற காலங்கிநாதர் எதிரே மிகப் பெரிய புலி ஒன்று படுத்துக்கிடக்கக் கண்டார். பார்த்த மாத்திரத்தில் 'அது ஒரு புலியல்ல; புலி உருவில் படுத்திருப்பவர் ஒரு மகா சித்தரே' என்பதை உணர்ந்து கொண்டார் (செய்தி போகர் 7000/6867 ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது)

மேலும் உயரே செல்லச் செல்ல காலங்கி நாதர் ஒருவர் பின் ஒருவராக மச்சரிஷியையும், கூர்ம ரிஷியையும், வராக ரிஷியையும், நரசிம்ம ரிஷியையும் கண்டார். மேலும் உயரே செல்லச் செல்ல வாமனரிஷி, பரசுராமரிஷி, ராமரிஷி, பலராமரிஷி, பௌத்த ரிஷி, கல்கிரிஷி ஆகிய பத்து ரிஷிகளையும் சந்தித்து ஆசிபெற்றார். இவர்களையே கலியுக மனிதர்கள் திருமாலின் தசாவதாரங்கள் என்று கூறியுள்ளனர்.

*சதுரகிரியில் காலங்கிநாதர்:* *('ஞானவிந்த ரகசியம்' என்ற 30 பாடல்கள் கொண்ட நூலில் தன் தவ வாழ்க்கை பற்றி காலங்கி நாதரே கூறியது)*

*காலங்கிநாதர் சதுரகிரி மலைப் பகுதியில் நீண்ட காலம் தவ வாழ்க்கை வாழ்ந்தார். அக்காலத்தில் அம்மலைக் குகைகளில் நீண்டகால தவத்தில் ஈடுபட்டிருந்த உயர்நிலை சித்தர்களையும். மகரிஷிகளையும் பற்றிக் கூறியுள்ளார். 9ஆம் பாடலில், அம்மலைக்கு சதுரகிரி என்ற பெயர் வந்த காரணம் "வேதங்கள் நான்கும் ஒன்றாய் சார்ந்திங்கு ஒருருவாய் சமைந்ததாலே" என்கிறார். இதே பாடலில் இங்குள்ள மகாலிங்கரின் அடியைப் போற்றி விண்ணவரும், மண்ணவரும் உயர் முனிவர் சித்தர் எனப் பெயர் பெற்றாரே' என்கிறார். 11-ஆம் பாடலில், அப்பகுதியில் 'நவசித்தர் குகை ஒன்றுண்டு; நின்றந்தச் சித்தர்களை மனத்துள் எண்ணி நிதானமாய் அவ்வழியில் போகவேண்டும் என்கிறார் அடுத்த மூன்று பாடல்களில் பாம்பாட்டிச் சித்தர், அத்திரி முனிவர், நாதாந்த சித்தர், வேதாந்த சித்தர், குதம்பைச் சித்தர், ஞானசித்தர், மிருகண்டேயர் வரரிஷி, தவசித்தர், யோகசித்தர், பதஞ்சலி முனிவர், வியாக்கிரமர், அகப்பைச்சித்தர், நாதரிஷி, வியாச முனிவர், ஆகிய சித்தர்களும் மகரிஷிகளும் வாழ்ந்துவரும் குகைகளைப் பற்றிக் கூறியுள்ளார்.*

**வணிகனுக்குக் கோவில்கட்ட பொன்கொடுத்த வரலாறு:**

*காலங்கிந நாதர் சதுரகிரியில் தவம் இயற்றிக் கொண்டிருந்த காலத்தில் ஒருநாள் வணிகன் ஒருவன் அவரிடம் ஓடிவந்து அவர் காலில் விழுந்து "ஐயனே! ஒரு சிவாலயம் கட்ட வேண்டும் என்ற ஆசையில் ஆலயத்திருப்பணி வேலையையும் தொடங்கிவிட்டேன். தொடக்க காலத்திலேயே கட்டடம் எழுப்பும் பணியில் கையில் இருந்த செல்வம் எல்லாம் கரைந்துவிட்டது. வீடு நிலம்*

எல்லாவற்றையும் விற்று செலவு செய்துவிட்டேன். ஆலயத்திருப்பணியில் முழுமையாக ஈடுபட்டதில் தொழிலையும் விட்டுவிட்டேன். இப்போது உணவுக்கும் வழியின்றித் திண்டாடுகிறேன். செல்வந்தர்களும், மன்னரும்கூட எனக்கு உதவி செய்ய மறுத்துவிட்டனர். இப்போது எனக்கு உங்களைவிட்டால் வேறு கதி இல்லை" என்று வேண்டிக் கதறினான். காலங்கிநாதரோ அவனுக்கு பதில் ஏதும் கூறவில்லை.

இருப்பினும் வணிகன் மனம் தளரவும் இல்லை. முனிவரைவிட்டுச் செல்லவும் இல்லை. இரவுபகலாக அவருக்குத் தொண்டு செய்துகொண்டு அங்கேயே தங்கிவிட்டான். ஓர் இரவு ஆழ்ந்த தூக்கத்தில் அவன் எப்போது நான் கோவில் கட்டுவேன்? எப்போது என் ஐயனைப் பிரதிஷ்டை செய்வேன்? என்று பிதற்றிக் கொண்டிருந்தான். அதைக் கண்ணுற்ற முனிவர் 'அவன் கோவில் கட்டவே விரும்புகிறான்' என்பதைப் புரிந்து கொண்டு அவன்மேல் இரக்கப்பட்டு அவனுக்கு உதவி செய்ய முடிவு செய்தார். மலை மேலிருந்த பல அரிய மூலிகை களைக் கொண்டு 'வகாரத் தைலம்" என்ற தைலத்தைத் தயாரித்து அதிலிருந்து சுத்த தங்கத்தைத் தயாரித்துக் கொடுத்தார். வணிகனும் அத்தங்கத்தை விற்று திருக்கோவிலைக் கட்டி முடித்தான்.

மேலும் வகாரத் தைலம் பொங்கிக் கொண்டிருந்ததைக் கண்ட சித்தர் செம்பொன் உண்டாக்கக்கூடிய அத்தைலத்தைத் தீயோர் எவரும் எடுத்துப் பயன்படுத்தக் கூடாது என்பதற்காக அதை ஒரு கிணற்றில் தேங்க வைத்தார். அக்கிணற்றின்மேல் ஒரு பாறையைப் போட்டு மூடிவிட்டு அதன் நான்கு புறத்திலும் வராகி, காளி, பேச்சியம்மை, கருப்பண்ணன் ஆகியோரைக் காவலுக்கு வைத்துவிட்டு மீண்டும் தவமியற்ற வேறோரிடத்திற்குச் சென்று விட்டார். இந்த வரலாறு சதுரகிரி தல புராணத்தில் உள்ளது.

**சமாதி கூடிய இடம்:**

காலங்கிநாதர் சீனநாடு இந்தியாவின் வட, மத்திய பகுதிகளையெல்லாம் சுற்றிக்கொண்டு கடைசியாக தமிழகம் வந்து சேலம் மாவட்டத்தில் உள்ள கஞ்சமலையில் தவ வாழ்க்கை வாழ்ந்து வந்தார். அப்போது மலையடிவாரத்தில் சுயம்புவாக இரண்டு லிங்கங்கள் தோன்றக் கண்டார். ஞானதிருஷ்டியால் அந்த லிங்கங்கள் இரண்டும் லவன், குசன் என்று கண்டுணர்ந்தார். அந்த லிங்கங்களுக்கு அவை தோன்றிய இடத்திலேயே கோவில்கட்டி வழிபட்டும் வந்தார். கடைசியில் அங்கேயே ஜீவ சமாதியும் அடைந்தார். இவை யாவும் திரேதா யுகத்தில் நடந்து முடிந்தவை.

இவையெல்லாம் நடந்து முடிந்து பல ஆயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. கலியுகம் தோன்றியே ஐயாயிரம் ஆண்டுகளும் கடந்துவிட்டன. லவகுசர் கோவிலும் சித்தர் சமாதியும் சிதைந்துபோய் காலத்தால் மண் மூடி புதைந்துவிட்டன. ஒரு மூலவர் பெருமாள் சன்னதியும் துவஜஸ்தம்பமுமே அங்கே கோவில் இருந்ததற்கு அடையாளமாக எஞ்சி நின்றன.

சமீப காலத்தில் கஞ்சமலைப் பகுதியில் வாழ்ந்துவரும் சந்திரப்பிரகாசம் என்பவருக்கு, சமாதிகூடிய காலங்கி நாதரின் திருவருள் கிடைக்கப்பெற்றது. தெய்வ நிலையில் வாழ்ந்துவரும் அந்த சித்தரின் அருளால் சந்திரப்பிரகாசம் என்பவர் உள்ளுணர்வில் "நீண்ட காலத்திற்கு முன் அங்கு லவகுசர்களின் கோவில் இருந்தது. அவர்களுக்குப் பக்கத்திலேயே காலங்கி நாதரின் ஜீவ சமாதியும் இருந்தது. சீதா தேவியார் தன் இரு பிள்ளைகளுடன் அக்கினிப் பிரவேசம் செய்தபோது லவன், குசன் ஆகிய இருவரில் குசன் மட்டும் தீயில் கருகிய கரிய மேனியுடன், வெளிப்பட்டு இங்கு கரிய பெருமாள் என்ற திருப்பெயருடன் கோவில் கொண்டுள்ளார்

அருகிலேயே காலங்கிநாதரும் 'கரடி சித்தர்' என்ற பெயருடன் ஜீவ சமாதி பூண்டுள்ளார்" என்ற உண்மைகள் தோன்றின.

அதைத் தொடர்ந்து காலங்கிநாதரின் கட்டளையைத் தலைமேல் கொண்டு அருவநிலையிலுள்ள அந்த மகாசித்தரின் அனுக்ரகத்துடன் சந்திரப் பிரகாசர் கரிய பெருமாள் கோவிலை கஞ்சமலைக்கு அருகில் உள்ள அரியானூரில் சித்தர் சமாதி கூடிய இடத்திலேயே எழுப்பினார். மூலவருக்கு இடப்பாகத்திலேயே காலங்கிநாதரின் சிலையையும் பிரதிஷ்டை செய்தார். கடந்த 2003 ஆம் ஆண்டில்தான் இக்கோவிலின் குடமுழுக்கும் நிறைவேறியது இன்றும் காலங்கிநாதர் 'கரடிசித்தர்' என்ற திருநாமத்துடன் அக்கோவிலில் குடிகொண்டிருந்து மக்களுக்கு உதவி செய்து வருவதுடன் வழிகாட்டியாகவும் இருந்து வருகிறார். அவருக்குக் கரடி சித்தர் என்ற பெயர் வந்த வரலாறு பிற்சேர்க்கையாக உள்ளது.

காலங்கி நாதர் கஞ்சமலையில்தான் சமாதி பூண்டுள்ளார் என்பதைக் கீழ் வரும் நிகழ்ச்சி உறுதிபடுத்துகிறது. இதன்படி:

காலங்கிநாதர் அவருடைய குருநாதர் திருமூலருடன் கஞ்சமலைப்பகுதிக்கு வந்தார். சீடரை உணவு சமைக்கச் சொல்லிவிட்டு குருநாதர் மலைச்சாரல்களில் மூலிகைகளைத் தேடிச் சென்று விட்டார். அரிசி வெந்து கொண்டிருந்தபோது காலங்கி, அருகில் இருந்த ஒரு செடியின் குச்சிலையை ஒடித்து அதைக் கொண்டு சோற்றைக் கிளறினார். அதன் விளைவாக சோறு கருப்பாகிவிட்டது.

குரு வந்தால் கோபிப்பாரே என்ற பயத்தில் அவர் கருகியிருந்த சோறு முழுவதையும் தானே சாப்பிட்டுவிட்டார். சாப்பிட்ட மாத்திரத்தில் அவர் ஒரு இளம் வாலிபனாக மாறிவிட்டார். அவர் கிளறிய குச்சி ஒரு அரிய மூலிகை என்பது அப்போதுதான் அவருக்குத் தெரிந்தது.

திரும்பி வந்த திருமூலர் தன் சீடனின் உடலில் ஏற்பட்டிருந்த மாற்றத்தைக் கண்டுவியந்து தனக்கும் அந்த இளமை வரவேண்டும் என்றார். காலங்கிநாதர் தன் விரல்களைத் தொண்டைக்குள் விட்டுக் குமட்டி சாப்பிட்ட சோற்றை யெல்லாம் வாந்தி எடுத்தார். அதை சாப்பிட்ட மாத்திரத்தில் குருநாதர் திருமூலரும் இளைஞராகி விட்டார்.

இதனால் பெருமகிழ்ச்சி அடைந்த குருநாதர் தன் சீடருக்கு உடனே தவத் தீட்சை அளித்து காலங்கிநாதரை சுத்த சித்தர் நிலைக்கு உயர்த்திவிட்டார்.

நிறைநிலை சித்தரான காலங்கி நாதர் மீண்டும் ஆயிரம் ஆண்டுகள் கஞ்சமலையின் தெற்கேயுள்ள உத்தம சோழபுரத்தில் எழுந்தருளியுள்ள கரபுரீஸ்வரரை நினைந்து தவமிருந்தார். பிறகு ஒரு நாள் ஆதிசிவன் அவர் முன் தோன்றி அவருக்கு சித்தேஸ்வரர் என்ற திருநாமம் சூட்டி கஞ்ச மலைப்பகுதியிலேயே இருந்து அருளாட்சி செய்து வருமாறு கட்டளையிட்டு மறைந்தார்.

இறைவன் கட்டளைக்கிணங்க காலங்கிநாதர், கஞ்ச மலையிலேயே வீராசனத்தில் இரண்டு யுகக்காலமாக சித்தேஸ்வரராக இருந்து அருளாட்சி செய்து வருகிறார்.

இன்றும் பௌர்ணமிதோறும் சேலத்திலிருந்து 20 கி.மீ தொலைவில் 18 கி. மீ. சுற்றளவு கொண்டுள்ள கஞ்ச மலையைச் சுற்றி கிரிவலம் வந்து கஞ்சமலை சித்தேஸ்வரராக அருள்புரியும் காலங்கிநாதரை வழிபட்டு நலம்பெற்று வருகின்ற பக்தர்கள் ஏராளம்.

இந்த மலைக்கோவிலுக்கு சேலம் பழைய பேருந்து நிலையத்திலிருந்து நேரடியாக பேருந்துகள் செல்கின்றன.

இக்கோவிலில் சித்தேஸ்வரராக இருந்து இறைமாட்சி செய்துவரும் காலங்கி நாதர் கஞ்சமலை சித்தர் என்றும் வழங்கப்படுகிறார்.

ஆனால் 'போகர் 7000' என்ற நூலில் 5742 ஆம் பாடலில்

"சித்தான காலங்கி முனிவர்தானும்
சிறப்புடனே சீனபுதிதன்னிலசென்று
முனையானை சமாதி தனிலிறங்கியல்லோ
பக்தியுள சீனபதி மாந்தருக்கு
பலகாலும் தரிசனங்கள் புரிகுவாரே"

என்றுள்ளவாறு காலங்கிநாதர் சீன தேசத்தில் சமாதி பூண்டுள்ளார்.

ஒரு சமயம் போக முனிவர் சீன நாட்டில் காலங்கிநாதர் சமாதி அடைந்திருந்த முக்காதக் கோட்டைக்குள் நுழைந்து அவரை வணங்கி நின்றார். அப்போது சமாதி கூடத்தின் கதவு தானாகவே திறந்து கொண்டது. காலங்கிநாதர் ஒளிமயமாகப் போகருக்குத் தரிசனம் தந்தார். இந்த இருவேறு ஆதாரங்களின்படி காலங்கிநாதர் சீனாவில் சமாதியடைந்துள்ளார் என்று எண்ண வேண்டியுள்ளது.

போகரின் 'ஜனன சாகரம்' என்ற நூலின் 306 ஆம் பாடலில் வரும்,

"ஆதியென்ற சிதம்பரமே திருமூலராச்சு
அவருடன் பதினெண் பேரதிலேயாச்சு
சோதியென்ற காலங்கி நாதர்தாமும்
துலங்குகின்ற காஞ்சிபுரந்தனிலேயாகும்"

என்ற அடிகளின்படி காலங்கிநாதர் காஞ்சிபுரத்தில் ஜோதி வடிவிலே சிவத்துடன் கலந்தார் என்று கொள்ள வேண்டியுள்ளது. காலங்கிநாதர் திருக்கடவூரில் சமாதி பூண்டுள்ளார் என்றும் சில சித்த ஆய்வு நூல்கள் கூறுகின்றன.

அவர் எங்கே சமாதி கொண்டுள்ளார் என்பது சரியாகத் தெரியவில்லை என்றாலும் அவரை உண்மையாக வழிபட்டு வரும் பக்தர்கள் அனைவர்களின் இதயங்களிலும் குடிகொண்டு வாழ்ந்து வருகிறார் என்பது மட்டும் உலகம் உள்ளளவும் மறுக்க முடியாத உண்மை.

## பிற்சேர்க்கை

## காலங்கிநாதருக்கு கரடிசித்தர் என்ற பெயர் வந்த வரலாறு

அக்காலத்தில் உத்தம சோழபுரத்தில் வாழ்ந்து வந்த காடன் என்பவனுக்கு நான்கு பெண்கள் இருந்தனர். அவனுடைய தங்கை மகன் ஒருவன் அவனிடம் வேலை செய்து வாழ்ந்துவந்தான். தன் பெண்கள் பெரியவர்கள் ஆனதும் தன் முதல் மகளைத்தன் மருமகனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாக வாக்களித் திருந்தான். ஆனால் வாக்கு தவறி அவளை வேறு ஒரு உறவினனுக்கு மணம் செய்து கொடுத்தான். இவ்வாறே வாக்கு தவறி இரண்டாவது மகளையும், மூன்றாவது மகளையும் கூட வேறு இருவருக்கு மணம் முடித்து விட்டான்.

காடனின் மருமகன், தன்மாமன் அவனது நான்காவது மகளையும் தனக்கு மணம் செய்துகொடுக்க மாட்டான் என்பதைத் தெரிந்திருந்தாலும் தன் மாமன் வாழ உண்மையாக உழைத்து வந்தான். ஒருநாள் மாமனும் மருமகனும் மலைக்காட்டு வழியே சென்று கொண்டிருந்தபோது காடன் தன் மருமகனிடம், என் நான்காவது மகள் உனக்குத்தான் என்றான். அதைச் சிறிதும் நம்பாத மருமகன் "நான் இனியும் ஏமாறத் தயாராக இல்லை. உன் கடைசி மகளையும் நீ வீரும்பும் வேறு யாருக்காவது கொடுத்துவிடு. நான் என் வழியைப் பார்த்துக் கொள்கிறேன்" என்றான். அப்போது கஞ்சமலையில் சித்தேஸ்வரராகக் கோயில் கெண்டிருந்து

அருளாட்சி செய்து வரும் காலங்கிநாதர் ஒரு கரடி உருக்கொண்டு கரபூரீஸ்வரரை வழிபடுவதற்காக அவ்வழியே வந்தார். அக்கரடியைக் கண்ட காடன், அவ்விலங்கு ஒரு மகா சித்த புருஷர் என்பதை அறியாதவனாய், அக்கரடியைக் காண்பித்து, இக்கரடி சாட்சியாக என் மகளை உனக்கே திருமணம் செய்து கொடுக்கிறேன்; இது சத்தியம், என்று மருமகனுக்கு வாக்கு கொடுத்தான்.

கொஞ்சம் நாள் கழித்து காடன் தன் மகளுக்கு வெளியில் மாப்பிள்ளை தேடத் தொடங்கினான். அப்போது ஒரு நாள் அவன் மருமகன் தங்கள் உறவினர்கள் யாவரையும் கூட்டமாக அழைத்து வந்து வைத்துக்கொண்டு அவர்கள் முன்னிலையில் காடன் மூன்று முறை சத்தியம் தவறியதையும், நான்காவதாகத் தனக்குக் கரடியை சாட்சியாக வைத்து சத்தியம் செய்ததையும் இப்போதும் சத்தியம் தவறிப் பேசுவதையும் விபரமாக எடுத்துரைத்தான் . காடன், தன் மருமகன்தான் பொய் கூறுகிறான் என்றான். அதனால் மனம் உடைந்த மருமகன் கடவுளை நினைத்து 'நான் சொல்வது உண்மையென்றால் அந்தக் கரடியே வந்து சாட்சி சொல்லி உண்மையை வெளிப்படுத்தட்டும்' என்று மனமுருகி வேண்டினான். அடுத்த நொடியே காலங்கிநாதர் அனைவரும் காண கரடி உருவில் அங்கே தோன்றி, மூன்று முறை தலை அசைத்து மருமகன் சொன்னது உண்மையென்று நிரூபித்து அவனுக்கே காடன் தன்மகளை மணம் முடித்துக் கொடுக்க வைத்தார். அதுமுதல் அவர் கரடி சித்தர் என்ற பெயராலும் வழிபடப்பட்டு வருகிறார். இந்த நிகழ்ச்சி கஞ்சமலை 'அருள்மிகு சித்தேஸ்வர் சுவாமி திருக்கோயில் தல வரலாறு' என்ற நூலில் இடம்பெற்றுள்ளது.

# 9. இடைக்காடர்

## முன்னுரை

பன்னெடுங்காலமாக திருவண்ணாமலையில் அருணாசலேஸ்வரராக இருந்து அருளாட்சி செய்து வரும் மகாசித்தர் இடைக்காடர். திருப்பதியில் கொங்கணவர் வேங்கடவனாய் இருந்து வரையாது செல்வ வளத்தை வழங்கிக் கொண்டிருப்பதுபோல் இடைக்காடர் திருவண்ணாமலையில் எண்ணற்ற சித்தர்கள் தோன்றி மக்களிடையே அருள் நெறியை இந்த நில உலகம் உள்ள வரை பரப்பிக்கொண்டிருக்க வழியமைத்து வருகிறார். பதினெண் சித்தர்களின் சமாதிக் கோவில்களில் அருணாசலேஸ்வரர் கோவிலிலுள்ள "அண்ணாமலையார் பாதம்" என்ற வழிபாட்டிடமே இடைக்காடர் சமாதி கொண்டுள்ள இடம் என்பது பெரும்பாலோர் கருத்து.

### இடைக்காடரும் நவநாதசித்தரும்

நவநாத சித்தர்கள் இடைவிடாது நாதோபாசனை செய்து கொண்டு சதாசர்வகாலமும் உருவமற்றவர்களாக விண்வெளியில் சஞ்சரித்துக்கொண்டிருப்பவர்கள். ஒரு சமயம் அவர்களில் ஒருவருடைய அருட்கடாட்சம் இடைக்காடர் மேல் பட்டது.

அப்போது இடைக்காடர் ஆடுமேய்த்துக்கொண்டிருந்த சிறுவன். தொண்டை மண்டலத்தில் திருவண்ணாமலைப்பகுதியில்

உள்ள இடையன்திட்டு என்ற பகுதியில் வாழ்ந்து வந்தார். தினமும் மலைச்சாரலில் உள்ள இடையன்மேடு என்ற பகுதியில் ஆட்களை மேயவிட்டு விட்டு காலைமுதல் மாலைவரை ஆடோட்டும் கோலை தரையில் ஊன்றிப் பிடித்தவண்ணம் நின்ற திருக்கோலத்தில் தவம் செய்து கொண்டிருப்பது அவர் வழக்கம். அப்போது அவருடைய உடல் பூமியில் இருந்தாலும் அவரது மனம் மட்டும் பிரம்மத்தை நாடி விண்வெளியில் அலைந்து கொண்டிருக்கும். இந்த நிலையில் அவரைப் பல நாள் பார்த்துக்கொண்டு விண்வெளியில் சென்று கொண்டிருந்த அந்த நவநாதசித்தர் இவருடைய பிரம்மோபசனையால் ஈர்க்கப்பட்டு ஒருநாள் பூமியில் இறங்க இடைக்காடர் முன் நின்றார். இடைக்காட்டு முனிவரும் அந்த விண்ணக சித்தரின் தெய்வீக சக்தியால் உந்தப்பட்டு கண்விழித்துப் பார்த்தார். அன்பொழுக நவநாத சித்தருக்கு அருந்த ஆட்டுப்பால் கொடுத்து உபசரித்தார். அதனால் அகம் மகிழ்ந்த நவநாத சித்தர் இவருக்கு மானசீக தீட்டையாக பிரம்மோபதேசம் செய்து விட்டு மறைந்தார். அதுமுதல் இவர் கவிபாடும் திறம்பெற்ற மகாசித்தராக விளங்கினார். இந்த செய்தி அபிதான சிந்தாமணியிலும் காணப்படுகிறது.

## போகரும் இடைக்காடரும்

பல சித்த இலக்கியங்களில் இவர் போகரின் சீடர் என்ற குறிப்பே காணப்படுகிறது. இவர் போகரின் சீடர்களில் ஒருவர் என்பது போகரின் வாழ்க்கை வரலாற்றிலிருந்தும் தெரிய வருகிறது. இந்தக் கருத்தே மிகவும் நம்பத்தகுந்ததாகவும் உள்ளது.

இக்கருத்துப்படி ஒருநாள் போகசித்தர் விண்வழியே போய்க்கொண்டிருந்தபோது, சிறுவனாகிய இடைக்காடனின் தவத்தால் ஈர்க்கப்பட்டு பூமிக்கு வந்து கொஞ்சம் நாள்

இடைக்காடருடனிருந்து அவருக்கு சித்த வித்தைகளைக் கற்றுக்கொடுத்தார். போகரிடமிருந்து மருத்துவம், வானியல், சோதிடம், முதலியவற்றையும் இவர் முழுமையாகக் கற்றுத் தேர்ந்தார். அவைபற்றி பல நூல்களும் இவர் எழுதியுள்ளார். அவைகளில் இவர் எழுதிய 'சாரீரம்' என்ற மருத்துவ நூல் மிகவும் சிறந்த நூலாகக் கருதி போற்றப்பட்டு வருகிறது.

## திருமாலின் அவதாரம்

இடைக்காடர் திருமாலின் அவதாரம் என்ற கருத்தும பரவலாக இருந்து வருகிறது. ஒரு சமயம் விஷ்ணு பக்தர்கள் பலர் இவரிடம் வந்து, திருமாலின் பத்து அவதாரங்களில் எந்த எந்த அவதார மூர்த்திகளை வழிபட்டால் விரைவில் நன்மைகள் கிட்டும் என்று கேட்டனர். அவர்களிடம் 'ஏழை, இடையன், இளிச்ச வாயன்' ஆகிய மூவருக்கும் விழாக்கள் எடுத்து வழிபாடு செய்யுங்கள். உங்களுக்கு எல்லாவ வளங்களும் கிட்டும் என்று கூறினார். இவைகளில் 'ஏழை' என்ற சொல் இராமாவதாரத்தையும் 'இடையன்' என்ற சொல் கிருஷ்ணாவதாரத்தையும் 'இளிச்ச வாயன்' என்ற சொல் நரசிம்ம அவதாரத்தையும் குறிப்பனவாகும். மேலும் இவர் இடையர்குலத்தில் பிறந்தவர். பிறவியிலேயே கருவில் திருவுடையவராக விளங்கிய சித்தர். இவருடைய சித்தர் பாடல்களில் 'தாண்டவக் கோனே', 'கோனாரே' என்று கோகுல வாசனை விளித்துப் பாடும் கண்ணிகளும் உள்ளன. இவைகள் யாவும் இவரைத் திருமாலின் அவதாரமாகவே மக்கள் கருதினர் என்பதை உறுதி செய்கின்றன.

## வாழ்ந்த காலம்

இடைக்காடர் கடைச்சங்ககாலத்தில் வாழ்ந்தவர். புறநானூற்றிலும் (எ.கா. வாகைத் திணையில் 42 ஆம் பாடல்),

நற்றிணை முல்லைத் திணையிலும், குறுந்தொகையிலும் அவர் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. திருவள்ளுவ மாலை அவரால் பாடப்பட்ட சங்க காலத் தனி நூல். நற்றினை 142 ஆம் பாடலில் "ஆயன் மழையில் நனைந்தபடியே ஊன்று கோல் மேல் கால் வைத்து நின்று கொண்டு ஆட்டை அழைக்கஒரு பாடல் பாட, அதைப்பார்த்து ஆட்டைக் கவரவந்த நரி பயந்தோடும்" என்று கூறும் அடிகள் கருத்துச் சுவையும் கவி நயமும் மிக்கவை. "கடுகைத்துளைத்து எழுகடலைப் புகட்டி குறுகத்தரித்த குறள்" என்று திருக்குறளின் பெருமையை கடைச்சங்க காலப் புலவர்களிடையே எடுத்துக்கூறிய பெரும் புலவர் இவர். இவர் தமிழ்ச்சங்கம் (கடைச்சங்கம்) அழிந்து போகச் சாபம் கொடுத்தா ரென்றும், குளமுற்றத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடியுள்ளார் என்றும் கபிலரின் சமகாலத்தவர் என்றும் தெரியவருகிறது.

## வாழ்ந்த பகுதி

இவர் பல சான்றோர்களை ஈன்றெடுத்த தொண்டை நாட்டில் திருவண்ணாமலைப்பகுதியில் உள்ள இடையன் திட்டு என்ற ஊரைச் சேர்ந்தவர். இடையர் குலத்தில் பிறந்த இவர் சிறுவயதில் ஆடுமேய்ப்பதையே தொழிலாகக் கொண்டிருந்தார். பெரிய சித்தராக மாறி இயற்கையையே கட்டுப் படுத்தும் அளவிற்கு தவவலிமை பெற்றிருந்தவர். திருவண்ணாமலை அருணாச லேஸ்வரர் கோவிலில் சமாதி கொண்டுள்ளார்.

இவர் மதுரைக்குக் கிழக்கிலுள்ள இடைக்காட்டில் பிறந்தவராகவோ மலையாளப் பகுதியில் உள்ள இடைக்காடு என்னும் ஊரில் தோன்றியவராகவோ இருக்கக் கூடும் என்ற கருத்தும் நிலவுகிறது. இவைகளை உறுதிசெய்யப் போதிய ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

## 12 ஆண்டு கடும் பஞ்சம்

அவர் தன் சோதிட ஞானத்தைக் கொண்டு 'விரைவில் 12 ஆண்டுகள் மழை பெய்யாது நாடே பசியாலும் பஞ்சத்தாலும் அழியப் போகிறது. மனித இனம் மட்டுமல்லாது ஆடு மாடுகளும் மரம் செடி கொடிகளும் பாலை நிலமாக மாறப் போகிறது' என்று கண்டுணர்ந்தார். அந்தப் பஞ்சத்தில் தன் ஆடுகளை எப்படியும் காப்பாற்ற வேண்டும் என்று முடிவுசெய்தார். அதன் விளைவாக பாலை வனப்பகுதிகளிலும் வற்றாது காடாக வளர்ந்திருக்கும் எருக்கன் செடிகளின் இலை தழைகளை மட்டும் தன் ஆடுகளுக்கு உணவாகக் கொடுத்தார். மற்ற எந்த மரம் செடி கொடிகளையும் அவற்றின் கண்களுக்கே காட்டாது வளர்த்தார். வறட்சியிலும் வளர்ந்து பலன்தரக்கூடிய குறுவரகு என்ற தானியத்தை சேற்றில் கலந்து சுவர் எழுப்பித் தன் குடிலை அமைத்துகொண்டார். தன் குடிலைச் சுற்றி குறுவரகு கலந்த மண் சுவரை எழுப்பிக்கொண்டார்.

எருக்கிலையை மட்டுமே உணவாக உண்டு வந்த ஆடுகளுக்கு எருக்கிலையின் நச்சுத்தன்மையால் உடல் முழுவதிலும் நமைச்சல் ஏற்பட்டது. அரிப்பு வரும்போதெல்லாம் அந்த ஆடுகள் தங்கள் முதுகுகளை அந்த சுவர்களில் தேய்த்துக்கொண்டன. அப்போது மண்ணுடன் சேர்ந்து உதிர்ந்த குறுவரகை சுத்தம் செய்து அதையே இடைக்காடர் உணவாகக் கொண்டார். தன் விருந்தினர்களுக்கும் குறுவரகுப் பண்டங்களையும் ஆட்டுப் பாலையுமே கொடுத்து உபசரித்தார்.

அவர்கள் இந்த உணவுமுறைக்குப் பழகிப்போவதற்கும் பஞ்சம் தொடங்குவதற்கும் காலம் சரியாக அமைந்துவிட்டது. அந்தப் பஞ்சத்தில் மனிதர்களும் மாண்டழிந்தனர். ஆடுமாடுகளும் மரம் செடிகொடிகளும்கூட அறவே பட்டொழிந்தன. இடைக்காடரும் அவருடைய ஆடுகளும் மட்டுமே உயிர் வாழ்ந்து கொண்டிருந்தனர்.

12 வருடங்கள் கடந்தபின் ஒரு நாள் பூமியைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வானவெளியில் போய்க்கொண்டிருந்த நவக்கிரக நாயகர்கள் பூமியில் காணும் இடமெங்கும் உயிரற்ற வறண்ட பாலைவனமாக உள்ள போது இடைக்காடரும் அவருடைய ஆடுகளும் எப்படி உயிர்வாழ்கின்றனர்? என்பதைத் தெரிந்துகொள்ள இடைக்காடர் குடிசையின் முன் விண்ணிலிருந்து இறங்கினர். இடைக்காடர் அவர்களுக்குத் தாராளமாக குறுவரகுப் பண்டமும் ஆட்டுப் பாலும் கொடுத்து உபசரித்தார். எருக்கிலைகளை மட்டுமே உண்டு வளர்ந்த அந்த ஆடுகளின் பாலில் எருக்கன் செடிக்குரிய நச்சுத்தன்மை நிறைந்திருந்ததால் ஆட்டுப் பாலைக்குடித்த நவக்கிரக நாயகர்கள் தூக்க மயக்கம் போதை மயக்கம் இரண்டும் சேர சாப்பிட்ட களைப்பில் படுத்து மெய்மறந்து தூங்கிவிட்டனர். இடைக்காடர் தன் சோதிட ஞானத்தையும் தவ வலிமையையும் கொண்டு, தூக்க மயக்கத்தில் தம்மை மறந்து கிடந்த நவக்கிரக நாயகர்களை, நல்ல மழை பொழிவதற்கு ஏற்ற வகையில் இடம் மாற்றிப் படுக்க வைத்தார். நாயகர்கள் இடம் மாறியதற்கு ஏற்ப பூமியைச் சூழ்ந்து விண்வெளியில் அமைந்துள்ள துவாதச மண்டலத்தில் நவக்கிரகங்களும் இராசிகள் மாறி அமைந்தன. சிறிது நேரத்திலேயே வானத்தில் கருமேகம் சூழ்ந்திட பூமியின் மேல் இடிமுழக்கத்துடன் பெருமழைபெய்ந்தது. வறண்டிருந்த பூமி வெள்ளக்காடாக மாறியது.

திடீரென்று ஏற்பட்ட குளிரால் உந்தப் பட்டு விழித்தெழுந்த நவக்கிரக நாயகர்கள் தாங்கள் ஒன்பது பேரும் இடம் மாறி இருந்ததையும் பாலைவனச் சுற்றுச் சூழல் சோலைவனமாக மாறி இருந்ததையும் கண்டு ஆச்சரியக் களிப்பில் ஆழ்ந்தனர். 'சித்தர்களுக்குப் பிறகு தான் தெய்வங்கள் எல்லாம்' என்பதை உளமாற உணர்ந்தனர்.

அவர்கள், "இந்த மாமனிதர் மக்கள் நலத்திற்காக மாமழை பொழியவைத்த மெய்ஞ்ஞானி. இந்தப் பேரருளாளர் உலகம் உள்ளளவும் விண்ணவர் போற்றுதலுக்கும் மக்கள் வழிபாட்டிற்கும் உரிய பெருந்தெய்வமாயிருந்து தீப வடிவத்தில் தரிசனம் கொடுத்த வண்ணம் அருளாசி செய்து வருவாராக' என்று இடைக்காடரை வாழ்த்தி விட்டு விண்ணகம் ஏகினர். அவர் இன்றும் அருணாசலத் தீபமாக இருந்து அருளாட்சி செய்து வருகிறார்.

## தவ வாழ்க்கை பற்றி இடைக்காடர்

முதலில் அவர் சூனியமே பரம்பொருள் என்பதை உணரவேண்டும். இல்லையேல் ஆன்மா பிரம்ம நிலைக்கு உயர வேறு வழியே இல்லை என்கிறார்.

"வானியல்போல வயங்கும் பிரமமே
சூனியம் என்றறிந்து ஏத்தாக்கால்
ஊனியல் ஆவிக்கொரு கதியில்லையென்று
ஓர்ந்து கொள்வீர் நீர் கோனாரே."

அடுத்ததாக 'எல்லாமாகவும் ஒன்றுமே இல்லாத வெட்ட வெளியாகவும் உள்ள அந்தப் பரம்பொருளை அல்லும் பகலும் மனதில் இருத்தித் தவம் புரிந்தால் மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம். இதற்கு மந்திரம் எதுவும் சொல்ல வேண்டுவதில்லை' என்கிறார்.

"சொல்லில் சகல நிட்கள மானதை
சொல்லினால் சொல்லாமல் கோனாரே
அல்லும் பகலும் அகத்தில் இருத்திடில்
அந்தகன் கிட்டுமோ கோனாரே?"

ஒரு குருவின் வழிகாட்டலைக் கொண்டே இந்த தவமுறையைப் பயில வேண்டும் என்கிறார்.

"செவிதனில் கேளாத மறை தாண்டவக்கோனே - குரு
செப்பில் வெளியாமலவோ தாண்டவக்கோனே"

அதனால் தவறான பாதையில் சென்று அழிந்து விடாமல் குருமூலமாக உன் உள்ளே உள்ள மெய் விளக்கை உணர வேண்டும் என்கிறார்.

"கை விளக்குக் கொண்டு கடலில் வீழ்வார் போல
மெய்விளக்குன் உள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே"

அப்படி குருவின் மூலமாக உள் ஒளிபெற்று விட்டால் நீயே பிரம்மத்தைக் கண்ட குருவின் நிலைக்கு உயர்ந்துவிடுவாய். அப்படி உயர்ந்தபிறகு நீ மற்றவருக்கு வழிகாட்டி அவர்களைக் கரையேற்ற வேண்டும் என்கிறார்.

"இருட்டறைக்கு நல்விளக்காய்
இருக்கும் உன்றன் வல்லமையை
அருள்துறையுள் நிறுத்தி
விளக்காகுக நீ புல்லறிவே,"

## மக்கள் வழிபாடுபற்றி இடைக்காடர்

அவர் வைணவ பக்தர்களுக்கு, இராமனையும் கிருஷ்ணனையும் நரசிம்ம மூர்த்தியையும் விழா எடுத்து வழிபட்டால் எல்லா நலன்களும் பெருகும் என்று கூறியுள்ளதை முன்னரே கண்டோம். சிவனை வழிபட்டால் கர்மவினைகள் அகன்று நற்கதி கிடைக்கும் என்றும் கூறியுள்ளார்.

"சூரியன் வாள்பட்ட துய்ய பனிக்கெடும்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரி இடப் பாகன்தான் நெஞ்சில் போற்றியே
நற்கதி சேர்ந்திடும் கோனாரே"

அவர் உருவ வழிபாட்டை மறுக்கவில்லை. கடவுளை எந்த உருவத்தில் வழிபட்டாலும் தெய்வ அருள் கிடைக்கும் என்றே கூறினார். அவர் காலத்தில் மக்கள் கோவில்கள் கட்டி பல்வேறு தெய்வங்களுக்கும் விழா எடுத்து வழிபாடுகள் செய்தனர். அவர்கள் வழிபாடுகளில் ஆடம்பரங்களும் வெளிப்பகட்டும் இருந்தனவே தவிர மனிதர்களின் உள்ளங்களில் உண்மையான பக்தி இல்லை. இதனால் கிரகக் கோளாறுகளும் இயற்கைச் சீற்றங்களும் பெருகும். அதனால் மக்கள் துன்புறுவார்கள். அவர்களுடைய விதியை அவர்கள் அனுபவித்துதான் தீரவேண்டும் என்று கவலைப்பட்டார்.

## அவர் சமாதி பற்றிய கருத்து

அவர் கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகை நட்சத்திரம் கூடிய பௌர்ணமி இரவில், இப்போது "அண்ணாமலையார் பாதம்" உள்ள இடத்தில் சமாதி கூடினார் என்றும் பொதுமக்கள் காண அவருடைய ஆன்மா ஒளித்திரளாக விண்நோக்கி சென்றது என்றும், அந்த நாளே இன்றும் 'அண்ணாமலை தீப விழா"வாக கொண்டாடப்படுகிறது என்றும் கருதப்படுகிறது. அண்ணாமலை தீபத்திருவிழாவன்று அவர் சமாதி அடைந்த திருவண்ணாமலை நகரமெங்கும் நீண்டகாலமாக அன்னதானம் நடைபெற்று வருகிறது. இவர் வாழ்ந்த காலத்தில் தன்னை நாடிவந்தவர்களுக்கெல்லாம் அன்புடன் உணவளித்து விருந்து உபசாரம் செய்வதை தன் கடமையாகவே கொண்டு வாழ்ந்து வந்திருக்கிறார். அதன் பிரதிபலிப்பே இப்போதும் தீபத்திருநாளன்று நடைபெற்று வரும் அன்னதானங்கள்.

ஓம் இடைக்காடரே நமஹ

ஓம் அருணாசலேஸ்வராய நமோநமஹ

இந்த மந்தரத்தை உச்சரித்து தினமும் வீட்டில் இருந்தபடியே வழிபாடு செய்தாலும் போதும்அருணாசலேஸ்வரரின் திருவருளால் இல்லத்தில் எல்லா வளங்களும் பொங்கும். வாழ்க்கை இன்பமாக அமையும்

## இடைக்காடர் இன்றும் அருவ நிலையில் இருந்து அருளாட்சி செய்துவரும் இடையன்திட்டு

சென்னையிலிருந்து புதுவை செல்லும் கிழக்குக் கடற்கரை சாலையில், காஞ்சிபுரம் மாவட்டம் செய்யூர்வட்டத்தில் கடப்பாக்கம் என்ற திருத்தலம் உள்ளது. இந்த ஊர் பேருந்து நிலையத்திலிருந்து கிழக்கே 2 கி.மீ சென்றால் அருள்மிகு உண்ணாமுலை அம்மன் உடனுறை அருணாசலேஸ்வரர் ஆலயம் உள்ளது. இந்த ஆலயம் காசிப்பாட்டை என்ற சாலையில் கடற்கரைக்கு அருகில் உள்ளது (இவ்வூர் சென்னையிலிருந்து 105 கி.மீ. தெற்கே உள்ளது. பேருந்து நிறுத்தத்திலிருந்து கோவிலுக்கு செல்ல ஆட்டோ வசதியும் உள்ளன. கோவில் மாலை 4.00 மணிமுதல் 7.00 மணிவரை திறந்திருக்கும் என்றாலும் கோவில் அர்ச்சகரின் வீடு பக்கத்திலேயே இருப்பதால் எந்த நேரத்தில் சென்றாலும் இவ்வாலயத்தில் மனநிறைவோடு இறை தரிசனம் செய்யலாம்)

இக்கோவிலுக்கு அருகில் வங்கக் கடலில் காணப்படும் “இடையன் திட்டு' என்ற இடத்தில் இப்போது இடைக்காடர் அருவ நிலையில் வாழ்ந்து வருகிறார். இவர் ஒவ்வொரு பௌர்ணமி இரவிலும் இங்குள்ள அருணாசலேஸ்வரரை ஒளிவடிவில் சென்று வழிபட்டு வருகிறார் என்று தெரிகிறது. திருவண்ணாமலையில் அருணாசலேஸ்வரர் பாத பீடத்தில் ஜீவ சமாதி கொண்ட இந்த

சித்தர் கடப்பாக்கம் அருணாசலேஸ்வரர் மூலம் இப்பகுதியில் வாழும் எளிய மக்களுக்கு மறைமுகமாக உதவிகள் செய்து கொண்டும் அருள்வழிகாட்டிக்கொண்டும் வரவேண்டும் என்பதும் அருணைமலையாளின் திருவுளம் போலும். இக்கோவிலில் சிவராத்திரிக்கு மறுநாள் சூரிய உதய ஒளியும் மாசி, பங்குனி மாதங்களில் பௌர்ணமி உதய நிலவு ஒளியும் மூலவர்மீது படுவது இத்திருத்தலத்தின் தனிச்சிறப்பு.

# 10. தமிழ் நாகை தந்த இராமதேவர்

**தோற்றம்:**

இராமதேவர் நாகைப்பட்டினத்தைச் சேர்ந்தவர். அவர் புலத்தியரின் சீடர் என்பதை "பரிபாஷை விளக்கம் இருபத்தேழு" என்ற நூலின் காப்புச் செய்யுளில்

"குண்டலிதான்பூண்ட புலத்தியர்தன் பாதம்
குருமொழிதான் ஆயிரத்தின் பீடம்போற்றி"

என்று தெளிவாகப் பாடியுள்ளார்.

இவர் வைணவ பிராமண குலத்தில் மாசி மாதம் பூரம் நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் (சிம்ம ராசியில்) பிறந்தவர் என்று போகர் "போகர் 7000" என்ற நூலில் கூறியுள்ளார். குருவருளால் இவர் குண்டலினி யோகம் செய்து மகாசக்தியாகிய மனோன்மணி தன்னுள் இருந்து தன்னை வழி நடத்திச் செல்வதை உணர்ந்தவர். அவர் "இராமதேவர் பூஜா விதி" என்ற சிறு நூலின் காப்புச் செய்யுளை

"ஆதியென்ற மணிவிளக்கை அறியவேணும்
அகண்ட பரிபூரணத்தைக் காணவேணும்"

எனத்தொடங்கி அதில் வாலைத் தெய்வத்தின் வழிபாட்டு மந்திரம், வாசியோகம், சாகாக்கலை ஆகியவற்றை விளக்கியுள்ளார். அதில்

இறைவனுக்கு செய்யும் பூஜைகள் வீண் போகா என்று உறுதிபடக் கூறியுள்ளார்.

### நாகையில் சட்டை நாதர்பிரதிஷ்டை

அவரது உள்ளத்தில் காசி விஸ்வநாதரை தரிசிக்கவேண்டும் என்ற பேரவா எழுந்தது. தன்னை மறந்து நடைப்பயணமாகவே காசி சென்றடைந்தார். அங்கே விஸ்வநாதரை மனமுருகத் தொழுதுவிட்டு வந்து கங்கையில் மூழ்கிய போது அவர் கையில் சட்டை நாத சுவாமியின் விக்ரகம் கிடைத்தது. அந்த லிங்கத்தைக் கொண்டுவந்து நாகையில் பிரதிஷ்டை செய்யவேண்டும் என்ற எண்ணம் எழவே சற்றும் தாமதிக்காது உடனே விண் வழியே நாகைவந்து அதைப் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்து வந்தார்.

சட்டை நாதர் அருளால் அவருக்கு பல்வேறு சித்திகளும் பலசித்தர்களின் தொடர்பும் கிடைத்தன. அந்த் சட்டை நாதர் இப்போது நாகையில் நீலாயதாட்சி உடனுறை காயா ரோகணசுவாமி கோவிலின் தென்மேற்கில் ஒருகல் தொலைவில் தனிக்கோவில் கொண்டு அருள்மிகு சட்டையப்பராக இருந்து அருளாட்சி செய்து வருகிறார்.

### அவர் மெக்கா செல்லல்

இராமதேவர் முகம்மதியராக மாறியபிறகு 'யோகோபு வைத்திய வாத சூத்திரம்' என்ற நூலை எழுதியுள்ளார். தான் மெக்கா சென்றதற்கான முக்கிய காரணத்தை அதில் அவர் விளக்கியுள்ளார். அக்காரணமாவது:

இராமதேவர் "கைலாச சட்டை நாதர் தீட்சை இருநூறு' என்ற நூலை எழுதி முனிவர்களின் தலைவரான திருமூலரிடம் கொடுத்தார். திருமூலர் அதைக்கிழித்தெறிந்தார். அப்போது அங்கிருந்த அகத்தியர் முதலான முனிவர்கள் 'இதை ஏன் கிழித்தீர்?'

எனக்கேட்க திருமூலர் பதில் ஏதும் கூறவில்லை. அடுத்து இராமதேவர் அதே வினாவை விடுத்தபோது "நீ கேட்க வேண்டா. மேட்டினம் பேசாதே. போ, போ!" என்று கடிந்து கொண்டார்.

அப்போது அரபு நாட்டு வணிகர்கள் அடிக்கடி கப்பலில் நாகைக்கு வந்து போய்க்கொண்டிருந்தனர். அப்போது அரபு நாட்டுப் பாலை நிலத்தில் அபூர்வமான கல்ப மூலிகைகள் நிறைய வளர்ந்திருந்தன என்று பல சித்தர்கள் இராம தேவரிடம் கூறியிருந்தனர். இவ்விரு காரணங்களாலும் எப்படியும் மெக்கா சென்று வரவேண்டும் என்ற எண்ணம் சித்தர் மனதில் ஆழப் பதிந்தது. ஒருநாள் அதே எண்ணத்தில் இராம தேவர் தன்னை மறந்த நிலையில் தியானத்தில் ஆழ்ந்தார். தியான நிலை கலைந்து விழித்து பார்த்தபோது தான் அறியாமலே அவர் மெக்கா வந்திருப்பதை உணர்ந்தார்.

**மெக்காவில் இராமதேவர்**

மெக்கா மக்கள் எல்லோரும் இஸ்லாமியர். திடீரென்று வேற்று நாட்டைச் சேர்ந்த முஸ்லீம் அல்லாத ஒருவரைக்கண்ட அம்மக்கள் இராமதேவரைப் பார்த்து "நீ யார் எப்படி எங்கள் தீன் நாட்டிற்கு வந்தாய்? உன்னைக் கொன்றுவிடுவோம்" என்று பயமுறுத்தினர். "நான் ஒரு தவயோகி. இங்கு நான் எப்படி வந்தேன் என்பது எனக்கே தெரியவில்லை" என்று இராம தேவர் கூற அங்கிருந்த முஸ்லிம் ஞானி ஒருவர் 'இவர் கூறுபவை எல்லாம் உண்மை' என்று கூறினார்.

மெக்கா மக்கள் 'உன்னை நாங்கள் நம்புகிறோம். நீ முஸ்லீமாக மாறினால்தான் எங்கள் தீன் நாடடில் வாழமுடியும்' என்று கூறினர். இராமதேவர் முஸ்லீமாக மாறி யாக்கோபு என்ற புதிய பெயருடன் அந்த மக்களுடன் ஒன்றுபட்டுவாழ்ந்தார். அம் மக்களுக்கு உபதேசம் செய்தல், மருத்துவம் பார்த்தல் போன்ற பல வழிகளில்

உதவி செய்து மெக்கா மக்கள் பேரன்புக்குப் பாத்திரராகி நீண்ட காலம் அவர்களுடனேயே வாழ்ந்து வந்தார். இந்தச் செய்திகள் யாவும் "போகர் 7000' என்ற நூலில் இடம்பெற்றுள்ளன.

ஒருநாள் நபிகள் நாயகம் ஒளி உருவில் யாகோபுக்குக் காட்சியளித்து தெய்வீக சாதனைகள் புரியும் நுடபங்களை விளக்கி அருளினார். பின்னர் மகாசித்தரான போகர் அவர்முன்தோன்றி கொஞ்ச காலம் மக்கள் தொண்டு செய்துவிட்டு ஜீவ சமாதி அடையும்படி கூறி மறைந்தார். போகர் கூறிய படி மக்கள் தொண்டு செய்துவந்த யாகோபு சித்தர் காற்றையே உடலாகக் கொண்ட காலங்கி நாதரின் ஆசிபெறவிரும்பி அவரை நினைத்து கடுந்தவம் புரிந்தார். காலாங்கி நாதர் அருளுடலுடன் தோன்றி, ஜீவசமாதிகூடி மரணமிலாப் பெருவாழ்வு வாழ வாழ்த்துரை கூறி மறைந்தார். யாகோபு சித்தரும் ஜீவ சமாதி கூடி தவம்புரியத் தொடங்கினார்.

**40 வருடக்கடுந்தவம்**

அவர்தம் சீடர்களை அழைத்து "நான் பூமிக்கடியில் தவம் செய்யப் போகிறேன். பத்து ஆண்டுகள் கழித்துதான் வெளிப் படுவேன்". என்று கூறி ஒரு குழிதோண்டி அதில் இறங்கி சமாதிபூண்டார். கொஞ்சம் நாளில் அவருடைய சீடர்கள் எல்லோரும் 'யாகோபு இறந்துவிட்டார். இனிமேலா வெளியில் வரப்போகிறார்? என்று கேலியாகப் பேசிவிட்டு அவ்விடத்தை விட்டகன்றனர். காலப்போக்கில் அவர்களில் சிலர் இறந்து விட்டனர். பலர் வாழ்ந்து கொண்டிருந்தனர். ஒரே ஒரு சீடர்மட்டும் குருமீது கொண்டிருந்த உறுதியான நம்பிக்கையுடன் 10 ஆண்டுகளும் அவருடைய சமாதிக்கு அருகிலேயே தங்கியிருந்து தவ வழிபாடு செய்துவந்தார்.

யாகோபு, தாம் குறிப்பிட்டு சொன்னது போல் பத்தாண்டு முடிவில் சமாதி கலைந்து வெளியே வந்தார். அவர் வெளிப்பட்டதும்

அங்கேயே தங்கியிருந்த சீடர் குருவிடம் நடந்தவைகளை யெல்லாம் கூறினார். அவற்றைக்கேட்ட குருநாதர், 'நான் மீண்டும் சமாதி கூடிச்செல்கிறேன். திரும்பிவர முப்பதாண்டுகள் ஆகும். நான் சமாதிக்குள் போனவுடன் என்னை கேலி பேசியவர்கள் எல்லோரும் கண்கள் குருடாகிவிடுவார்கள்."என்று கூறிவிட்டு மறுபடியும் சமாதிக்குள் சென்றுவிட்டார். அவர் சமாதி கூடிய அதே நேரத்தில் கேலிசெய்த சீடர்கள் யாவரும் குருடராயினர். இம்முறை அவர்கள், தாங்கள் செய்த குற்றங்களை உணர்ந்து திரும்பிவந்து சமாதிக்கு அருகிலேயே குருவழிபாடு செய்து கொண்டிருந்தனர். முப்பதாண்டு கழித்து வெளிப்பட்ட குருநாதர் அவர்கள் செய்த குற்றங்களை மன்னித்தார். சீடர்கள் யாவரும் கண்பார்வை பெற்றனர். யாகோபு அவர்களுடன் சில காலம் தங்கியிருந்து அவர்களுக்குப் பல உபதேசங்களைச் செய்ததுடன் பல மருத்துவ நூல்களையும் எழுதிக்கொடுத்து விட்டுத் தமிழகம் வந்தார்.

**கடைசிக்காலமும் ஜீவ சமாதியும்**

தமிழகம் வந்த யாகோபு மீண்டும் இராமதேவராக மாறி சதுரகிரி மலைப்பகுதியில் உள்ள ஒருவனத்தில் தவ வாழ்க்கை வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் தாம் அரபு மொழியில் எழுதிய மருத்துவ நூல்களை எல்லாம் தமிழில் மொழிபெயர்த்தார். அவர் தங்கியிருந்த வனம் இராமதேவர் வனம் என்றே அழைக்கப்படுகிறது.

அவருக்கு நிரந்தரமாக ஜீவசமாதி கூடும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார். உடனே அவர் சதுர கிரியை விட்டு அழகர் மலைக்குச் சென்றடைந்து அம்மலைமேல் ஜீவசமாதி அடைந்தார். அவர் ஜீவ சமாதி அடைந்தவிடத்தில்தான் இப்போது பழமுதிர்ச்சோலை முருகன்கோயில் உள்ளது. அந்த முருகன் கோவிலில் சித்தர்பிரான் இராமதேவர் அருள்மிகு முருகக் கடவுளாக இருந்து அருளாட்சி புரிந்து வருகிறார்.

# 11. சிவவாக்கியர்

**பெயர் காரணம்:**

*சிவ வாக்கியர் சங்கர குலத்தில் தைமாதம் மகம் நட்சத்திரத்தில் (சிம்மராசியில்) பிறந்தார். பிறக்கும் போதே 'சிவசிவ' என்று சொல்லிக்கொண்டே பிறந்தவர் என்பதால் சிவ வாக்கியர் என்று அழைக்கப்பெற்றார் என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது. இவர் தனது பாடல் தொகுப்பிற்கு 'சிவவாக்கியம்' என்று பெயர் சூட்டியுள்ளார். அந்த நூலின் காப்புச் செய்யுளாகிய*

**"அரியதோர் நமச்சிவாயம் ஆதிஅந்தம் ஆனதும்**
**ஆறிரண்டு நூறுதேவர் அன்றுரைத்தமந்திரம்**
**அரியதோர் எழுத்தை உன்னி சொல்வேன் சிவ**
**வாக்கியம்**
**தோஷ தோஷபாவமாயை தூரதூரஓடவே"**

*என்ற பாடலைக் கொண்டு அவர் நூல் தலைப்பை உணரமுடிகிறது. சிவ வாக்கியம் என்ற நூலை எழுதியதாலேயே அவர் சிவவாக்கியர் என்று அழைக்கப்பட்டார் என்று கொள்வதே பொருத்தமாகும்.*

**தவ வாழ்க்கை**

*சிவ வாக்கியரின் தந்தை தெய்வச் சிலைகள் செய்து விற்றுப் பிழைப்பு நடத்தி வந்தவர். தாயோ அருந்ததிக்கு ஒப்பான கற்புடைய*

மங்கை. இந்தத் தம்பதியர் சித்தர்களை அடுத்து வாழ்ந்து வந்தனர். தங்கள் மகன் பெரிய தவயோகியாக வரவேண்டும் என்பதற்காக தக்க குரு ஒருவரைத் தேடிக்கண்டுபிடித்து அவனுக்கு ஞானக்கல்வி புகட்டு மாறு வேண்டிக்கொண்டார்கள். சிவ வாக்கியரும் பதினெண் சித்தர்களில் பலரைநாடி அவர்களிடம் ஆர்வமுடன் வேதாந்தம் கற்று யோக நெறியில் சென்று சகல சித்திகளும் அடையப்பெற்றார். (இச்செய்திகள் 'அகத்தியர் 12000' நூலில் 434 முதல் 441 வரை உள்ள பாடல்களில் இடம்பெற்றுள்ளன.)

## இல்லறத் துறவி

துறவியாக வாழ்ந்துவந்த இவருக்கு திடீரென்று திருமணம் செய்துகொள்ளும் ஆசை எழுந்தது. பெற்றோரும் தகுதிவாய்ந்த ஒரு பெண்ணைப் பார்த்து அவருக்குத் திருமணம் செய்துவைத்தார்கள் (போகர் 7000 சத்தகாண்டம் பாடல்கள் 5759, 5760). மேலும் இவர் திருமூலர் மரபில் வந்த பெண்ணின் மகன் என்றும் இவரது குடும்ப வாழ்க்கையில் இவருக்கு சிவானந்தர் என்ற சித்தபுருஷர் மகனாகப் பிறந்தார் என்றும் போகர் கூறுகிறார். ஏழாண்டு குடும்ப வாழ்விற்குப் பிறகு மீண்டும் துறவு மேற்கொண்டு பல ஊர்களும் சுற்றிப் பல சீடர்களுக்கு தவ யோகம் பயிற்றுவித்துவிட்டு கடைசியாக கும்பகோணத்தில் சமாதி பூண்டார். இதுதான் சிவவாக்கியரின் நம்பத்தகுந்த உண்மை வரலாறு.

## அவர் வாழ்க்கை பற்றிய கர்ணபரம்பரைக்கதை குருதரிசனம்

சிவ வாக்கியரின் திருமண வாழ்க்கையைப் பற்றி செவி வழிச்செய்தியாக ஒரு கதை உள்ளது. அக்கதையைத் திருநெல்வேலி

முருகதாச சுவாமிகள் (1840-1899) பாடியுள்ள புலவர் புராணம் உறுதி செய்கிறது. அக்கதை வருமாறு:

சிவ வாக்கியர் சித்தன் போக்கு சிவன் போக்கு என்ற பழமொழிக்கிணங்க தமிழகத்திலிருந்து கால் நடையாகவே காசிக்குச் சென்றார். காசியில் ஒரு தெரு ஓரத்தில் ஒரு சக்கிலியன் செருப்பு தைத்துக்கொண்டிருந்தான். அவன் முகத்தில் காணப்பட்ட பிரம்மதேஜஸ் சிவவாக்கியரை அவன் பால் ஈர்த்தது. அவர் அவனை அடைந்த மாத்திரத்தில் அந்த சக்கிலியன் தன் பையிலிருந்த ஒரு நாணயத்தையும் ஒரு பேய்ச் சுரைக்காயையும் கொடுத்து 'இந்த நாணயத்தை கங்கையிடம் கொடுத்துவிட்டு இந்த பேய்ச் சுரைக்காயைக் கழுவிக்கொண்டு வா' என்று கூறினான்.

ஏன் என்று கேட்காமல் கங்கைக் கரையை அடைந்த சிவ வாக்கியர் அந்த நாணயத்தை கங்கையில் வீசி எறிந்தார். உடனே வளையல் அணிந்த ஒரு கை கங்கையிலிருந்து வெளிப்பட்டு அந்தக் காசைப் பெற்றுக்கொண்டது. பிறகு அவர் சுரைக்காயைக் கழுவி எடுத்துக்கொண்டு சக்கிலியனிடம் வந்தார்.

சக்கிலியன், "நீ கங்கையில் போட்ட காசை இங்கே வாங்கிக்கொள்' என்று தன் தோல் பையைத் திறந்தான். அதில் கங்கை நீர் நிறைந்திருந்தது. அத்தண்ணீரிலிருந்து கங்கா தேவியின் வளைக்கை வெளிப்பட்டு அந்தக் காசை சிவவாக்கியரிடம் கொடுத்தது. பிறகு சக்கிலியன் கொஞ்சம் மணலையும் அந்தப் பேய்ச் சுரைக்காயையும் அவரிடமே கொடுத்து இதை எந்தப் பெண் சமைத்துக் கொடுக்கிறாளோ அவளை மணந்துகொள். உன் வாழ்க்கை நன்றாக அமையும்," என்று வாழ்த்தி அனுப்பினான்.

தான் எண்ணிவந்த நோக்கம் இந்த சக்கிலியனுக்கு எப்படித் தெரியும்? என்ற ஆச்சர்யத்துடன் அவனையே குருவாகக் கொண்டு

அவன் காலைத் தொட்டு வணங்கிவிட்டு அந்த மணலையும் பேய்ச் சுரைக்காயையும் எடுத்துக்கொண்டு விரைந்து தமிழகம் வந்து சேர்ந்தார்.

## இல்லற வாழ்க்கை

சிவ வாக்கியர் தமிழ் மண்ணை மிதித்ததும் பிராமணர் முதலான நால்வகை வருணங்களையும் சேர்நத கன்னிப் பெண்ககளை அணுகி 'இந்த மண்ணையும் பேய்ச் சுரக்காயையும் சேர்த்து சமைத்துக் கொடுக்க முடியுமா? என்று கேட்டார். அப்பெண்கள் அனைவரும் இவரைப் பைத்தியக்காரன் என்று கூறிசிரித்து ஏளனம் செய்தனர். கடைசியாக மூங்கில் வெட்டிக் கூடை முறம் தயாரித்து விற்றுப் பிழைக்கும் ஒரு குறவர் சேரிக்குச் சென்றார். அங்கு ஒரு சிறு குடிசை வாயிலில் நின்று கொண்டிருந்த கள்ளம்கபடமற்ற ஒரு கன்னிப்பெண் இவர் கவனத்தைக் கவர்ந்தாள். அவளைப் பார்த்து, உன் பெற்றோர் வீட்டில் இல்லையா? என்று கேட்டார். அப்பெண், அவர்கள் வீட்டில் இல்லை; எங்கு சென்றார்களோ, தெரியவில்லை என்றாள்.

சிவ வாக்கியர் தான் கொண்டு வந்த மண்ணையும் பேய்ச்சுரைக்காயையும் அவளிடம் கொடுத்து "நான் அதிகப் பசியோடு நீண்ட தூரம் நடந்துவந்திருக்கிறேன். நீ இவற்றைச் சமைத்துக் கொடுப்பாயா? என்று கேட்டார். அந்தக் குறப்பெண் அந்த மண்ணை அரிசியாகவே எண்ணி அந்த மண்ணையும் பேய்ச்சுரைக்காயையும் சுவைபட சமைத்து அவருக்கு உணவு படைத்தாள். அவரும் அநத் உணவை அமுதமென சுவைத்து சாப்பிட்டுவிட்டு அந்த வீட்டின் புறத்திலேயே சிறிது நேரம் தங்கியிருந்தார். அவளுடைய பெற்றோர் வந்தவுடன் அவர்களிடம், நான் உங்கள் பெண்ணை மணம் செய்துகொள்ள வேண்டும்

என்பது என் குரு நாதரின் கட்டளை. உங்களுக்கு சம்மதமா? என்று கேட்டார். அவர்கள் 'திருமணத்திற்குப்பின் நீங்கள் எங்கள் சேரியிலேயே வாழவேண்டும். சரியென்றால் எங்கள் பெண்ணைக் கொடுக்கிறோம்' என்றனர். அவரும் அதற்கு சம்மதித்து அக்குறப்பெண்ணை மணந்துகொண்டு குறவர் தொழிலையே செய்து வாழ்க்கை நடத்தி வந்தார். (இச்செய்தி அபிதான சிந்தாமணியிலும் இடம் பெற்றுள்ளது)

## பற்றற்ற நிலை

ஒரு நாள் காட்டில் அவர் ஒரு மூங்கில் மரத்தை வெட்டியபோது அதிலிருந்து ஏராளமான தங்கத்துகள்கள் கொட்டின. அவைகளைப் பார்த்து அவர் 'ஆட்கொல்லி, ஆட்கொல்லி' என்று கத்திக்கொண்டு அஞ்சி ஓடினார். அதைக்கண்ட நான்குவேர் வழிமறித்து, 'ஏன் இப்படி ஓடுகிறாய்?' என்று கேட்க அவர் "மூங்கிலிலிருந்து ஆட்கொல்லி வெளிப்பட்டது' என்று பதிலளித்தார். அந்த நால்வரும் சிவ வாக்கியரை அழைத்துக்கொண்டு போய் அந்த மூங்கில் மரத்தைப் பார்த்தபோது அதிலிருந்து ஏராளமாகத் தங்கத் துகள்கள் கொட்டியிருக்கக் கண்டனர். அவர்கள் இதைத்தான் ஆட்கொல்லி என்கிறாயா? என்று கேட்டு அவரை அனுப்பிவிட்டு அந்தப் பொன் துகள்கைளை ஒரு மூட்டையாகக் கட்டினர். சூரியன் மறைந்தவுடன் அந்தப் பொன் மூட்டையைத் தூக்கிச் செல்ல முடிவு செய்தனர். அந்த மூட்டையைக் காக்கும் பணியில் இருவர் இருக்க மற்ற இருவரும் நால்வருக்கும் உணவு வாங்கிவரச் சென்றனர்.

காவல் இருந்தவர்கள் உணவு வாங்கி வரச் சென்றவர்களைக் கிணற்றில் தள்ளிக்கொன்றுவிடவும், உணவு வாங்கச் சென்றவர்கள், காவல் இருந்தவர்களுக்கு உணவில் விஷம் கலந்து

கொடுத்துக்கொன்றுவிடவும் திட்டமிட்டுச் செயல்பட்டனர். அவர்களின் திட்டப்படி விஷ உணவுடன் வந்தவர்களை காவல் இருந்த இருவரும் கிணற்றில் தள்ளி அவர்கள் மீது பெருங்கல்லைப்போட்டுக்கொன்று விட்டு கடும் பசிமயக்கத்தில் வேகவேகமாக விஷ உணவை உண்டு அழிந்தனர்.

## கொங்கணவர் நட்பு

ஒரு நாள் சிவவாக்கியர் கீரை பறித்துக்கொண்டிருந்தபோது அவரது தவ ஒளியால் ஈர்க்கப்பட்டு வான்வழியே சென்ற கொங்கணவர் அவரிடம் வந்து அளவளாவிச் சென்றார். பின் ஒரு நாள் கொங்கணவர் அவர் வீட்டிற்கு வந்தபோது சிவ வாக்கியர் வீட்டில் இல்லை. தனித்திருந்த அவர் மனைவியிடம் வீட்டில் கிடந்த பழைய இரும்புத் துண்டுகளைக் கொண்டுவரச் சொன்னார். அவைகளையெல்லாம் தங்கமாக்கிக் கொடுத்துவிட்டுச் சென்றார். வீட்டுக்கு வந்த சிவவாக்கியர் தன் மனைவியிடம் ஆட்கொல்லியான அந்தத் தங்கத்துண்டுகளை யெல்லாம் கிணற்றில் எறிந்துவிடச் சொன்னார். அப்புனிதவதியும் எவ்வித மனச் சலனமுமின்றி அவைகளைக் கொண்டுபோய் ஊர்ப்புறத்திலுள்ள பாழுங்கிணற்றில் போட்டு விட்டாள். அதன்பின் சிவவாக்கியர் ஒரு பாறையின்மேல் சிறுநீர் கழித்து விட்டு வந்து மனைவியிடம், இப்பாறைமேல் தண்ணீர் ஊற்று என்றார், அவள் தண்ணீர் ஊற்றியவுடன் பாறை தங்கமாக மாறியது. இத்தங்கத்தையெல்லாம் எடுத்துக்கொள் என்று அவர் கூற அவர் மனைவி ‘தங்களுக்கு வேண்டாதது எனக்கு எதற்கு?’ என்று கூறி மறுத்துவிட்டாள். அக்குறமகளுடன் ஏழு ஆண்டுகள் குடும்பம் நடத்திவிட்டு, இல்லறத்தை துறந்து பற்றற்ற துறவியாக வாழத் தொடங்கினார்.

## துறவு வாழ்க்கை

சிவ வாக்கியர் ஊர் ஊராய்ச் சுற்றி மக்கள் குறைகளைத் தீர்த்து வந்தார். தங்கம் தயாரிக்கும் முறையைக் கற்றுக்கொள்ளும் ஆசையில் பலரும் அவரிடம் சீடராக வந்தனர். ரசவாதம் கற்கவந்த ஒரு சீடனைப் பார்த்து 'மனதை ஒருமுகப்படுத்தி தவ யோகத்தில் திளைத்து காமத்தால் வெளியேறும் உன்னுடைய விந்தைக் கட்டி கல்லாக்கிவிட்டாயானால் நீயே மகா சித்தனாகிவிடுவாய். அப்போது இந்த உலகியல் இன்பங்கள் எல்லாம் அற்பமானவை என்று உணர்வாய். முக்தி என்னும் உண்மையான ஆன்ம விடுதலை வேண்டுமா? தொடர்ந்து வரும் பிறவித் துன்பங்களுக்குக் காரணமான சரீர சுகம் வேண்டுமா? என்று கேட்டார். அந்த சீடனும் "எனக்கு ரசவாதமும்வேண்டாம்; தங்கமும் வேண்டாம் சமாதி கூடி சித்திபெற அருள்புரியுங்கள்' என்று வேண்டி முக்தி தரும் சித்தர்வழியில் செல்லத் தொடங்கினான். பின்னர் பல சீடர்களும் வந்து அவரிடம் தீட்சை பெற்று சித்தி அடைந்தார்கள்.

## சமாதி கூடல்

இவ்வாறு பல ஊர்களுக்கும் தல யாத்திரையாக சென்றார். ஒவ்வொரு ஊரிலும் தவக்குடில்கள் அமைத்துக்கொண்டு தவயோகம் பயின்று வந்தார். அவ்வாறு அவர் தங்கி வாழ்ந்த ஊர்களில் சிவன் மலையும் ஒன்று. இத்தலத்தில் அவர்முன் முருகப்பெருமான் தோன்றி அருளாசி வழங்கியதாகக் கூறப்படுகிறது. அதற்கு அடையாளமாக இந்த சிவன் மலையில் சிவவாக்கியர் குகை ஒன்றும் உள்ளது. இம்மலை உச்சியில் முருகன் கோவிலும் மலை அடிவாரத்தில் ஒரு சிவன் கோவிலும் (நஞ்சண்டேஸ்வரர் திருக்கோவில்) உள்ளன.

இவ்வாறு பல ஊர்களும் சென்று தவ வாழ்க்கையும் சிவ வழிபாடும் செய்து வந்தார். ஒவ்வொரு ஊரிலும் மக்களுக்குப் பிணி நீக்கல் முதலான பல தொண்டுகளும் செய்துவந்தார். கடைசியில் குடந்தை மாநகரை அடைந்து அங்கேயே சமாதி பூண்டார். இன்றும் ஒவ்வொருமாத பௌர்ணமி தினத்தன்றும் குடந்தையில் உள்ள அவரது சமாதி பீடத்திற்கு பூசைகள் நடைபெற்று வருகின்றன.

# 12. கொங்கணவர்

## பிறப்பும் குடும்ப வாழ்க்கையும்

*கொங்கணவர் கொங்கு நாட்டில் சங்கர குலத்தில் உத்திராடம் நட்சத்திரம் முதல் பாதத்தில் (தனுசுராசியில்) பிறந்தவர் (போகர் 7000/5908, 5909) கொங்கு நாட்டில் ஊதியூர் மலைப்பகுதியில் அவர் பிறந்து வாழ்ந்ததால் அம்மலை கொங்கணகிரி என்றும் அழைக்கப்படுகிறது.*

*அவருடைய தாய் தந்தையர் இரும்பை உருக்கி பாத்திரங்கள் செய்து கோயில்களின் வாயில்களில் உட்கார்ந்து விற்றுவந்தனர். அவர்கள் யோகிகளுக்கும் சாதுக்களுக்கும் மனம் உவந்து தொண்டு செய்து வந்தார்கள். கொங்கணவர் பதினாறு வயதிலேயே இரும்புப் பாத்திரங்கள் செய்வதில் நிபுணராகி விரைவில் பாத்திர வியாபாரத்தில் பெரும் வணிகரானார். திருமணம் செய்து கொண்டு சிறாகக் குடும்ப வாழ்க்கையும் நடத்தினார். அதோடு முனிவர்களைப் பெரிதும் உபசரித்துவந்தார். அம்முனிவர்களும் அகமகிழ்ந்து இவருக்கு மெய்ஞ்ஞானத்தை ஊட்டிவந்தனர். அதனால் அவர் குடும்ப வாழ்க்கையைத் துறந்து துறவியானார் (அகத்தியர் 12000/ 4வது காண்டம் 414 ஆம் பாடல்).*

## பளிங்கரான வரலாறு

*விரைவிலேயே அவர் கூடுவிட்டுக் கூடு பாய்தல் முதலான அஷ்ட மாசித்திகளையும் பெற்று மகாசித்தரானார். ஒரு சமயம்*

அவர் மலைச்சாரல்களிலுள்ள காடுகள் வழியே சென்று கொண்டிருந்தபோது மலைவாழ் பளிங்கர் இனத்தைச் சேர்ந்த ஒருவன் இறந்து கிடந்ததைக் கண்டார். அவன் இனத்தவர்கள் கதறி அழுததைக் கண்டு அவர்கள் மீது இரக்கமுற்றுத் தன் சரீரத்தைவிட்டு அந்தப் பளிங்கனின் சரீரத்தில் புகுந்து ஒரு பளிங்கனாகவே மாறிவிட்டார். அவர் மறைத்துவைத்திருந்த அவரது உடலைக்கண்ட பளிங்கர்கள் அதை எரித்து சாம்பலாக்கிவிட்டனர். அது முதல் அவர் ஒரு பளிங்கனாகவே கடைசிவரை வாழ்ந்துவந்தார். (கருவூரார் வாதகாவியம் 700/ பாடல்கள் 217,218)

அதன்பிறகு போகர் அவருக்கு குருவாக அமைந்தார். போகரிடம் ஞானம் பெற்ற பின் அகத்தியரிடமும் சீடராயிருந்து தவ யோகத்தில் ஈடுபட்டு சித்தராக வாழத்தொடங்கினார்.

## கொக்கை எரித்த கதை

தவயோகத்தில் முழு நிறைவு பெற்ற கொங்கணவர் ஆதிபரம்பொருளை நோக்கி நீண்ட காலம் ஆனந்த நிஷ்டையில் ஆழ்ந்திருந்தார். ஒரு நாள் விண்வெளியில் பறந்துகொண்டிருந்த கொக்கொன்று எச்சமிட அது இவர் கண்இமையில் பட்டது. அதனால் கோபக்கனல் பொங்க விழிப்புற்றவர் கொக்கை அண்ணாந்து பார்க்க அது சுட்டெரிக்கப்பட்டு எரிந்து சாம்பலாகிக் கீழே விழுந்தது.

பலகாலம் உணவின்றி இருந்ததால் பசி வயிற்றைக் கிள்ள அவர் அருகில் இருந்த திருவள்ளுவர் வீட்டிற்குப் பிச்சைக்குச் சென்றார். வள்ளுவர் மனைவியாகிய வாசுகி அம்மையார் கணவருக்கு உணவு பரிமாறி நிறைவாகப் பணிவிடை செய்து முடித்துவிட்டு சிறிது தாமதித்து சித்தருக்குப் பிச்சை இட வந்தார். அதனால் அவர் கோபக்

கனல் தெறிக்க அந்தக் கற்பரசியைப் பார்க்க அவர் அமைதியான புன்முறுவலுடன் 'கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா?' என்று கேட்க அவர் வெட்கித் தலைகுனிந்து சென்றார். இச்சம்வம் "கொங்கணவர் வாத காவிய"த்தில் இடம்பெற்றுள்ளது.

## திருமழிசை ஆழ்வார் சந்திப்பு

அவர் வழிப்பயணத்தில் திருமழிசை ஆழ்வாரை சந்தித்தார். தான் வைத்திருந்த ரசக் குளிகையைக் காண்பித்து, இது காணி கோடியை பேதிக்கும் என்றார். ஆனால் ஆழ்வாரோ தன் உடம்பின் அழுக்கைத் திரட்டிக்கொடுத்து இது காணிகோடா கோடியைப் பேதிக்கும் என்றார். கொங்கணவர் ஆழ்வாரின் பெருமையை உணர்ந்து அவரை வணங்கி விடைபெற்றுத் தன் பயணத்தைத் தொடர்ந்தார்.

## கௌதமர் தொடர்பும் நிறைநிலை அடைவும்

அவர் ஒரு மலை அடிவாரத்தை அடைந்த போது அங்கே தம் உள்ளுணர்வில் இன்பமயமான தெய்வீகத்தோற்றங்கள் பலவற்றைக் கண்டார். அதோடு இனிமையான பல வாத்திய ஒலிகளையும் கேட்டார். அதைத் தொடர்ந்து அங்கே கௌதம ரிஷி ஒரு சமாதியிலிருந்து வெளிப்பட்டார். அவர் உபதேசம் பெற்ற கொங்கணவர் தம் தவவலிமையை மேலும் பெருக்கிக்கொள்ள பனிரண்டு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். மிக்க தவ வலிமையுடன் வெளிப்பட்ட கொங்கணவர் தான் ஒரு சர்வசக்தி வாய்ந்த ரிஷியாக உயரவேண்டும் என்ற ஆசையில் ஒரு யாகம் செய்யத் தொடங்கினார். அப்போது ஒளி உடலுடன் அவர் முன் தோன்றிய கௌதமர், தகுதிக்குமேல் ஆசைப்பட்ட கொங்கணவரை சபித்துவிட்டார். கொங்கணவர் கௌதமரை வணங்கி சாபவிமோசனம் கேட்க, முனிவர் 'சாபவிமோசனம் பெற தில்லை வனத்திற்குப் போ' என்று கூறிவிட்டு மறைந்தார்.

தில்லைவனம் சென்ற கொங்கணவர் முன் பராசர முனிவர் தோன்றி சாபவிமோசனம் அளித்தார். அதன்பிறகு கௌதமர் அங்கு தோன்றி யாகம் செய்ய வரமளித்தார். இவ்வளவு நல்வரங்கள் பெற்ற நிலையிலும், கொங்கணவர் தம் மனதில் ஏதோ குறை இருந்து வருவதை உணர்ந்து தன் குருநாதரான போகரிடம் சென்று சரணடைந்தார். குருவின் ஆணைப்படி திருமாளிகைத் தேவரிடம் சென்று நிர்வாணத் தீட்சை முதலான பல அரிய தீட்சைகளைப் பெற்று உயர்ந்த சித்தராக ஓரிடத்தில் தங்கி வாழ்ந்தார். அங்கு அவரிடம் 500க்கும் அதிகமான சீடர்கள் சேர்ந்தார்கள். அவர்கள் அனைவரும் ஞானமார்க்கத்திலும் குளிகை மார்க்கத்திலும் தேர்ச்சி பெற்று சிறந்து விளங்கினார்கள்.

## திருப்பதி சென்று சமாதி கூடல்

தமக்கு சமாதி கூடும் காலம் கூடிவந்துவிட்டதை உணர்ந்த கொங்கணவர் திருத்தணிகை சென்று வீரட்டகாசமூர்த்தியின் தலைமேல் தம் குளிகையை வைத்தார். லிங்க வடிவில் இருந்த அந்த சிவமூர்த்தி அக்குளிகையை நீராக்கி அழித்து விடாமல் தம்முள் ஈர்த்து மறைத்துக் கொண்டார். தன் தவறை உணர்ந்த சித்தர் சிவபெருமானைப் பணிந்து வழிபட்டு தம் குளிகையைத் திரும்பப்பெற்றார். அதன் பிறகு நேரே திருப்பதி சென்று திருவேங்கட மலைமீது தங்கி தவத்தைத் தொடங்கினார். அப்போது வனேந்திரன் என்ற சிற்றரசன் அவரிடம் வந்து சீடனானான். அவனுக்கு ஏற்ற எளிய முறையில் தவ வாழ்க்கையை அமைத்துக்கொடுத்துவிட்டு அங்கேயே ஜீவ சமாதி அடைந்தார். இப்போது அவர் திருப்பதி மலைமீது அருள்மிகு வெங்கடேசப் பெருமாளாக இருந்து கோடிக்கணக்கான பக்தர்களின் குறைகளைத் தீர்த்து வருவதுடன் நாடி வருபவர்களுக்கெல்லாம் வளமான வாழ்வளித்தும் வருகிறார்.

# 13. திருமூலர்

## முன்னுரை

*திருமூல நாயனாரும் திருமூல சித்தரும் ஒருவரே. இக்கருத்து சேக்கிழாரின் திருமூலநாயனார் புராணக்கருத்து. திருமூல நாயனாரின் ஞானமும் (11 பாடல்கள்) சித்தர் திருமூலரின் திருமந்திரமும் அவர் தவத்தினால் சிவநிலை அடைந்தார் என்பதையே வலியுறுத்துகின்றன. அவர் தவ வாழ்க்கையை மட்டுமே வாழ்ந்தார் என்ற ஒரே கருத்தை பிற சித்த நூல்களும் புராணங்களும் கூறுகின்றன.*

### அறியக்கிடைத்த (நம்பக்கூடிய) வரலாறு

*நாயன்மார்களில் திருமூலர் திரு நட்சத்திரம் ஐப்பசி மாதம் மூல நட்சத்திரம், இது சிதம்பரம் முதலான அனைத்து சிவாலயங்களும் கொண்டுள்ள நட்சத்திரம். இந்த சித்தர் மூல நட்சத்திரத்தில் பிறந்த தாலேயே திருமூலர் என்று அழைக்கப்படுகிறார் என்று கொள்வதே பொருத்தமானது.*

*அவர் வேளாளர் குலம் ஒன்றின் 21 வது தலைமுறையைச் சேர்ந்தவர் (போகர் 7000/5737). ஆயிரத்துக்கு அதிகமான ஆண்டுகள் சமாதி கூடியே வாழ்ந்தவர் (போ. 5862). அவர் திருமந்திரம் 3000 பாடல்களைப் பாடியுள்ளார்.*

*கடைசியில் (3000 ஆண்டு முடிவில்) திருவாவடுதுறையில் உள்ள சிவாலயத்தின் மேற்கேயுள்ள அரச மரத்தடியில் ஜீவ சமாதி பூண்டு அருளாட்சி செய்து வருகிறார். இதற்குத் திருவாவடுதுறை தலபுராணமே சான்றாக உள்ளது.*

## சேக்கிழாரின் பெரிய புராண வரலாறு

**பாடல்கள் 3564-3591**

*திருமூலர் கயிலையில் நந்தி அருள் பெற்ற நான் மறையோகி. பொதிகைமலையில் வாழும் குறுமுனியுடன் சிலநாள் சேர்ந்து வாழும் நோக்கத்தில் கயிலை மலை யிலிருந்து வந்து கொண்டிருந்தார். திருவாவடுதுறை வந்து அங்கு பசுபதி நாதரை வழிபட்டு சாத்தனூரை அடைந்தார். அங்கு மூலன் என்னும் மாடுமேய்ப்பவன் வினைப் பயனால் இறந்துகிடக்க பசுக்கள் துயரத்தோடு அவனைச் சூழ்ந்து நின்றன. அப்பசுக்களின் துயரத்தை நீக்குவதற்காக தவமுனிவர் தன் உடலை பாதுகாப்பாக ஓரிடத்தில் வைத்துவிட்டு சூக்கும உடலுடன் மூலன் உடலினுள் புகுந்து பசுக்களை யெல்லாம் சாத்தனூரில் உள்ள அவைகளின் வீடுகளில் கொண்டுபோய் சேர்ந்தார். திரும்பி வந்து பார்க்க தன் ஆதி உடலைக் காணாமையால் அதை சிவன் செயலாகவே கருதி, மூலன் உடலிலேயே திருவாவடுதுறைக்குத் திரும்பி வந்து சிவாலயத்தின் மேற்கு திசையில் (குட திசையில்) இருந்த பெரிய அரசமரத்தடியில் நிஷ்டை கூடி அமர்ந்தார். ஆண்டிற்கு ஒருபாடலாக திருமந்திர மாலையைப் பாடினார். இப்படியாக 3000 ஆண்டுகளில் 3000 பாடல்களைப் பாடி முடித்து அங்கேயே முக்திபெற்று கயிலாய பதியின் திருத்தாளை அடைந்தார்.*

இதே வரலாற்றைத்தான் 'திருத் தொண்டர் புராண சாரமும்', திருத்தொண்டர் திருவந்தாதியும் 'சிறுசிறு மாற்றங்களுடன் கூறுகின்றன. 'நந்தி அருளாலே மூலனை நாடினோம்' (1/130) என்னும் திரு மந்திரப் பாடல்வரி இதை உறுதி செய்கிறது.

## திருமூலர் சமாதி பற்றிய சித்தர்கள் கருத்து

சென்னை சித்த மருத்துவ நூல் ஆய்வு மைய நூல்கள் திருமூலர் சிதம்பரத்தில் சமாதி அடைந்துள்ளார் என்று கூறுகின்றன. இதே கருத்தை போக முனிவரும் கூறியுள்ளார். போகர் 'ஜனன சாகரம்' 312 ஆம் பாடலின்படி திருமூலர் சிதம்பரத்தில் சமாதி கூடி லிங்க வடிவில் உள்ளார். தில்லை நடராஜர் கோவிலில் அவர் சன்னதி ஸ்ரீமூலன் சன்னதி என்றே உள்ளது. அவருடன் வாழ்ந்த பதஞ்சலி முனிவரும், வியாக்ர பாதரும் அக்கோவிலில் சிலை வடிவில் உள்ளனர். திரு மூலர் சன்னதியை மையமாகக் கொண்டுதான் பாண்டிய மன்னர்களின் ஆதரவில் கருவூர்த்தேவரால் சிதம்பரம் நடராஜர் கோவில் கட்டப்பட்டது.

(போகர் ஏ. 5769)

## திருமூலர் பற்றிய சதுரகிரிதல புராணக் கதைகள்

1. வீரசேனத்திருமூலர்கதை: பாண்டிய நாட்டைச் சேர்ந்த இராசேந்திரபுரி ஒரு சிற்றரசு. அவ்வூர் மன்னனான வீரசேனன் இரக்கமற்றவன். தன் மகிழ்ச்சிக் காக கொலையும் செய்யக் கூடியவன். பசி, பட்டினியால் வாடிய அவன் நாட்டு மக்களும் அவனுடைய அன்பு மனைவியும் கூட அவனை வெறுத்தனர்.

ஒருநாள் ஒரு கொடிய நாக விஷத்தை நுகர்ந்து அவன் இறந்துவிட்டான். அப்போது சூக்கும உடலோடு விண் வழியில் சென்று கொண்டிருந்த திருமூலர் அம்மன்னனின் உடலைச் சுற்றி

அரசியாரும் மந்திரிகளும் அழுது புலம்பிக்கொண்டிருந்ததைக் கண்டார். சதுரகிரி சென்று அம்மலை இடுக்கொன்றில் தன் கல்பதேகத்தை மறைத்து வைத்ததுடன் அதற்குத்தன் முதன்மைச் சீடரான குருராஜனைக் காவல் வைத்துவிட்டு சூக்கும உடலுடன் அரண்மனைக்கு வந்து இறந்த மன்னனின் உடலில் புகுந்து வீரசேனத் திருமூலரானார்.

திருமூலவீரசேனர் ஆட்சியில் இராசேந்திரபுரி செழிப்படைந்தது. மக்கள் எல்லா நலன்களும்பெற்று இன்புற்று வாழ்ந்தனர். அரசியும் பழைய வீரசேனனிடம் அடைந்திராத இன்பங்களை திருமூல வீரசேனரிடம் அனுபவித்தாள். மன்னன் உடலில் இருப்பவர் ஒரு மகா சித்தர் என்பதைத் தெரிந்து கொண்டாள். அவரிடம் அன்பொழுகப் பேசி, அவர் தம் கற்பதேகத்தை மறைத்து வைத்திருந்த இடத்தையும் அத்தேகத்தையும் எரித்து அழிக்கும் முறைகளையும் கேட்டுத் தெரிந்துகொண்டாள். பிறகு மலைவாழ் மக்களான பளிங்கர்களுக்கு பணம் கொடுத்து சித்தரின் உடலை அழிக்கச் சொன்னாள்.

சில ஆண்டுகளுக்குப்பிறகு ஒரு நாள் விதி விளையாடியது. நீண்ட காலமாகத் தன் குரு திரும்பி வராததால் குருராஜன் திருமூலரைத் தேடிக்கொண்டு அரண்மனைக்கு வந்து கொண்டிருந்தார். அவர் நகர்ப்புறம் வந்தசமயம் பார்த்து பளிங்கர்கள், அரசி கூறியபடி சித்தரின் கல்ப தேகத்தை எரித்துவிட்டனர். அன்று வேட்டைக்குச் சென்ற மன்னர் வழியில் தன் சீடன் வருவதைக் கண்டு பயந்து அவரை அழைத்துக்கொண்டு மலைக் குகைக்குச் சென்றார்.

தான் பயந்தபடி தன் கல்ப தேகம் எரிந்து கிடந்ததைக் கண்ட திருமூலர் நடந்தவற்றையெல்லாம் ஞானத்தால் உணர்ந்து

தெளிந்தார். குருராஜரைத் தனித்து தவம்புரிந்து கரையேற வாழ்த்தி அனுப்பிவிட்டு அரண்மனைக்கு வந்தார். வந்த சில நாட்களிலேயே மீண்டும் தம் தவ வாழ்க்கையைத் தொடர சதுரகிரிக்கே திரும்ப வந்துவிட்டார்.

## வீரசேனத் திருமூலர் சம்பு கேசத்திருமூலராய் மாறிய கதை

திருவானைக்காவில் சம்புகேசன் என்ற பிராமணன் ஞான மார்க்கக் கல்வியில் சிறந்து விளங்கினான். குருவின் துணையில்லாமலே தன்னால் தவம்பயிலமுடியும் என்ற கர்வத்தில் அவன் சதுரகிரி சென்று அங்கு பிராணாயாமத்தைத் தொடங்கினான். தவறாகக் கும்பகம் செய்ததன் விளைவாக மூச்சை வெளிவிட முடியாமல் உயிர்நீத்தான். அவனது ஆவிபிரிந்த அரைமணி நேரத்திற்குள் அங்கு வந்த வீரசேனத்திருமூலர், அரசன் உடலிலிருந்து வெளிப்பட்டு சம்புகேசன் உடலில் புகுந்து சம்பு கேசத்திருமூலரானார். தான் குடியிருந்த அரசனின் உடல் பழுது படக்கூடாது என நினைத்து அவன் உடலை ஒரு மரப்பொந்தில் வைத்து மூடினார். அந்த மகாசித்தரின் கைப்பட்ட அந்த மரப்பொந்து தானாகவே மூடிக்கொண்டது. அந்த மரம் இனி அரச மரம் என்ற பெயரில் தழைக்கட்டும் என்று வாழ்த்திவிட்டு சதுரகிரி காட்டுப்பகுதியில் மீண்டும் தம்தவ வாழ்க்கையைத் தொடங்கினார்.

அந்த மலைப்பகுதியிலும் அவருக்கு பல சீடர்கள் வந்து சேர்ந்தனர். அவர்களை யெல்லாம் உயர்ந்த தவயோகிகளாக உருவாக்கி சித்திபெறச் செய்தார். அதோடு "திருமந்திரம் எண்ணாயிரம்" முதலான பல நூல்களையும் எழுதி முடித்துவிட்டு சம்புகேசத் திருமூலராக அங்கேயே சமாதி பூண்டார் என்று அகத்தியரின் 'சௌமிய சாகரம்' கூறுகிறது.

# 14. பிரம்மமுனி

முற்பகுதி வாழ்க்கை: குஜராத் மாநிலத்தில் துவாரகைக்கு அருகில் உள்ள ஒரு கிராமத்தில் பிறவியிலிருந்தே ஒரு குழந்தை தெய்வீக ஆற்றல்களோடு வளர்ந்து வந்தது. அக்குழந்தை வளர்ந்து சிறுவனாகி 16 வயதாகும் முன்பே தான் ஒரு பிரம்ம ஞானி என்று நிரூபித்து வந்தான். தெய்வீக ஆற்றலைக் கொண்டு அவன் மக்களின் நோய்களையும் குறைகளையும் போக்கி வந்தான். மக்கள் அவனை தெய்வமாகவே மதித்து ஞானேஸ்வரர் என்று அழைத்துவந்தனர்.

## கோரக்கருடன் நட்பு

கோரக்க மகாசித்தர் வடநாட்டு யாத்திரை சென்றபோது தன் தவவலிமையால் ஞானேஸ்வரரை வெற்றிகொள்ள வேண்டும் என்று அந்த கிராமத்திற்குச் சென்றார். தன்னைக் கண்டு அந்த சிறுவன் அஞ்சி ஓட வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு புலிமேலேறி அவனை நோக்கிச் சென்றார். அப்போது ஞானேஸ்வரர் ஒரு குட்டிச்சுவரின் அருகில் தன் நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார். ஒரு முனிவர் தன்னை காணவருவதைக் கண்ட ஞானேஸ்வரர் நண்பர்களுடன் குட்டிச் சுவரின்மேல் உட்கார்ந்து கொண்டு முனிவரை வரவேற்க விண்ணில் பறந்து சென்றார். அவர் தன்னை நெருங்கி வருவதைத் தடுக்க, கோரக்கர் தன் தவவலிமையால் பிரம்மாஸ்திரத்தை ஏவிவிட்டார். ஞானேஸ்வரர் அருகில் வந்த அந்த அஸ்திரம் பூமாலையாக மாறி அவர்கழுத்தில் விழுந்தது. அதனால் கோபமுற்ற கோரக்கர் நாகாஸ்திரத்தை ஏவினார்.

ஞானேஸ்வரர் அந்த நாகத்தைப்பற்றி எய்தவரிடமே திருப்பிவிட அது பாம்பாக வந்து கோரக்கர் கழுத்தில் விழுந்தது. அதன்மூலம் ஞானேஸ்வரரின் தெய்வீக ஆற்றல் தம் தவவலிமையை விட மிகவும் உயர்ந்தது என்பதை உணர்ந்த கோரக்கர் ஆணவம் அடங்கியவராய் ஞானேஸ்வரரை வணங்க இருவரும் நண்பர்களாயினர். பிறகு கோரக்கரும் ஞானேஸ்வரரும் ஒன்று சேர்ந்து வட மதுரை வழியாகக் குருக்ஷேத்திரத்தைச் சென்றடைந்தனர். அங்கு சிலகாலம் தவவாழ்க்கைக்குப்பின் நேரே தமிழ்நாடு வந்தனர்.

## ஞானேஸ்வரர் பிரம்ம முனியான பிறகு:

கோரக்கருடன் தமிழகம் வந்த ஞானேஸ்வரர் சதுரகிரி சித்தர் கூட்டத்தில் சேர்ந்து தமிழ் மொழியைக் கற்றார். தமிழக சித்தர்கள் அவரது தவ வலிமையைக் கண்டு வியந்து அவரை பிரம்மமுனி என்றே அழைத்தனர். பிறகு கோரக்கரும் பிரம்ம முனியும் தங்களாலும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் செய்ய முடியும் என்று நிரூபிக்க வேண்டி ஒரு யாகம் வளர்த்ததன்மூலம் கஞ்சாச்செடியும், புகையிலைச் செடியும் தோன்றுவதற்குக் காரணமாயினர். (விபரம் கோரக்கர் வரலாற்றில் காண்க)

## பிரம்ம முனி சமாதி கூடல்

தாம் இயற்கை விதிகளைக் கடந்து யாகம் வளர்த்தது தவறு என்பதை உணர்ந்த பிரம்மமுனி கோரக்கரைப் பிரிந்து தெற்கே சென்று இலங்கையை அடைந்தார். அங்குள்ள திரிகோண மலையில் ஜீவசமாதி கூடியிருந்து அருளாட்சி செய்து வருகிறார். பிரம்மமுனி ஜீவ சமாதி அடைந்த போது கோரக்கரும் அவர் அருகில் இருந்ததாகவும் கூறப்படுகிறது.

# 15. கோரக்கர்

## பிறப்பு

கோரக்கர் கொல்லி மலைச்சாரலில் உள்ள சம்பல் பட்டியில் பிறந்தவர். இவர் கார்த்திகை மாதம் ஆயில்யம் நட்சத்திரம் 2ஆம் பாதத்தில் வசிஷ்ட மகரிஷிக்கும் ஒரு குறவர்குடிப் பெண்ணிற்கும் மகனாகப் பிறந்தார். *(போகம் 7000/5912, 5913)*

## உண்மை வாழ்க்கை

இவர் பிராமணனாகப்பிறந்து கற்ப தேகத்துடன் சேணியத் தொழிலாளியாக வாழ்ந்து வந்தார். ஒரு நாள் ஒரு இடையன் பாம்பு கடித்து இறந்தான். இவர் அவன் உடலில் புகுந்து இடையனாக மாறினார். திரும்பிவந்து தன் கல்ப தேகத்தைத் தேடக் கிடைக்காததால் இடையனாகவே வாழ்ந்தார். சதுரகிரிசென்று பல முனிவர்களுடன் சேர்ந்து கற்ப மூலிகைகளை உண்டு இடையன் உடலையும் கல்ப தேகமாக மாற்றிக்கொண்டார். *(கருவூரார் வாத காவியம் பாடல்கள் 563 முதல் 577 வரை)*

அவர் பிறப்பு பற்றி அபிதான சிந்தாமணி: மச்சேந்திரர் சிவனிடமே ஞானம் பெற்ற மாமுனிவர். தேச சஞ்சாரியான அம்முனிவரிடம் ஒரு நாள் பிச்சையிட்ட ஒரு பெண், தனக்கு மகன் பிறக்க வரமளிக்கவேண்டினாள். அவளுக்கு முனிவர் விபூதி அளித்து

உட்கொள்ளச்சொன்னார். அவள் அதை அடுத்த வீட்டுக்காரியிடம் கூற அவள் 'அவன் ஒரு வேஷக் காரன். உன்னை மயக்கவே விபூதி கொடுத்திருக்கிறான். அதை அடுப்பில் போட்டு எரித்துவிடு' என்றாள். அப்பெண்ணும் அந்த விபூதியை எரியும் அடுப்பில் கொட்டி விட்டாள். சில ஆண்டுகள் கழித்து அவள் வீட்டுக்கு வந்த மச்ச முனி, உன் மகன் எங்கே? என்று கேட்டார். அவள் நடந்ததைக் கூற அவர் 'அடுப்பெரித்த சாம்பலை எங்கே கொட்டினாய்?' என்று கேட்டார். அவள் குப்பை மேட்டைக் காட்ட மச்சேந்திரர் "கோரக்கா, எழுந்து வா!' என்று அழைக்க குப்பைக் குள்ளிருந்து அத்தனை ஆண்டுகள் வளர்ந்த பிள்ளையாக கோரக்கர் வெளிப்பட்டார். வெளிப்பட்ட அச்சிறுவன் மச்சமுனியைத் தன் குருவாகக் கொண்டு அவருடன் சென்று விட்டான்.

## கண்ணை இழந்து பெற்ற கதை

ஒரு நாள் கோரக்கர் பிச்சைக்கு சென்ற போது ஒரு பார்ப்பனி ஒருவடையைக் கொடுக்க அதைக் கொண்டு போய் குருவுக்குக்கொடுத்தார் அந்த வடையைத் தின்ற மச்சமுனி மீண்டும் ஒரு வடைகேட்க கோரக்கர் அந்த பிராமனியிடம் சென்று 'என் குருவுக்கு இன்னும் ஒரு வடை வேண்டும்' என்றார். 'உம் குருவுக்காக உமது கண்ணைக் கேட்டால் கொடுப்பீரா?' என்று அவள் கேட்க கோரக்கர் உடனே தன் கண்ணைப் பிடுங்கிக்கொடுத்து அவளிடம் வடையை வாங்கிச்சென்று குருவிடம் கொடுத்தார். நடந்ததை அறிந்த குரு தவ வலிமையால் தன் சீடனுக்கு இழந்த கண்ணை வழங்கினார்.

## குடும்ப பந்தத்திலிருந்து குருவை மீட்டல்

தவயாத்திரையில் மலையாள நாட்டை அடைந்த மச்ச முனி பிரேமளா என்ற பெண்ணிடம் மயங்கி மீன நாதன் என்ற மகனுக்கும்

தந்தையாகிவிட்டார். குடும்ப வலையிலிருந்து தன் குருவை மீட்க கோரக்கர் கூத்தாடிகளுடன் மத்தளம் வாசிப்பவராகச் சேர்ந்து அவர்கள் வீட்டை அடைந்து குருவைத் தன்னுடன் வருமாறு அழைத்தார். குரு மறுத்தாலும் சீடர் விடவில்லை. ஒரு நாள் குழந்தை மீனநாதன் படுக்கையில் மல உபாதை செய்ய மச்சமுனி கோரக்கரை அழைத்து குழந்தையை நீரில் கழுவிவரச்சொன்னார். கோரக்கர் மீனநாதனைத் துணியுடன் சேர்த்து ஆற்றுக்குக் கொண்டுபோய்த் துவைத்து வெயிலில் காயவைத்தார். நடந்ததைக் கேட்ட முனிவர், 'என்மகனை அழைத்துவா' என, சிதைந்த உடல் துகள்கள்யாவும் சேர்ந்து 108 மீனநாதர்களாய் வந்து சேர்ந்தனர். கோரக்கர் அவர்களையெல்லாம் இணைத்து ஒரே மீனநாதனாக்கிக் கொடுத்துவிட்டு, குருவைத் தன்னுடன் வரும்படி அழைத்தார். வேறு வழியின்றி மச்ச முனியும் அவருடன் புறப்பட்டு விட்டார்.

பிரேமளா ஒரு தங்கப்பாளத்தை ஒரு துணியில் சுற்றி மச்சமுனியிடம் வழிச்செலவுக்கு கொடுத்தனுப்பினாள். வழியில் அதைக்கண்ட கோரக்கர் குருவுக்குத் தெரியாமல் அந்த மூட்டையைப் பிரித்து தங்கப் பாளத்தை எடுத்து ஒரு குளத்தில் எறிந்துவிட்டு துணியில் கற்களைவைத்துக் கட்டிவிட்டார். அதைக் கண்டுபிடித்த குரு நாதர் "கோரக்கா! முதலில் நீ என் மகனைக் கொன்றாய். இப்போது என் தங்கத்தைத் திருடினாய். இனி நீ என் சீடனல்ல' என்று கூற கோரக்கர் அங்கிருந்த ஒரு குன்றின் மேல் ஏறி சிறு நீர்கழிக்க அது ஒரு தங்கமலை ஆகிவிட்டது. பிறகு கோரக்கர் முனிவரிடம் 'குருவே! உங்களுக்கு வேண்டிய அளவு தங்கத்தை எடுத்துக்கொள்ளுங்கள் என்று கூறி குருவிடம் நல்விடை பெற்றுப் பிரிந்துசென்று விட்டார். மச்சமுனியும் மாயை தெளிந்து நிறைநிலை சித்தராகி பல தலங்களுக்குச் சென்று மக்களுக்கு உதவிகள் புரிந்துவிட்டுக் கடைசியில் திருப்பரங்குன்றம் சென்று

சமாதி பூண்டார். இவர் சமாதி பூண்ட இடத்தைத்தான் முருகன் தன் ஆறுபடைவீடுகளில் ஒன்றாகக் கொண்டு அருளாட்சி செய்து வருகிறான்.

## அல்லமாத்தேவர் ஆசிபெறுதல்

அல்லமாத்தேவர் மகா ஞானி. நாடி சாஸ்திரத்தை முழுமையாகக் கற்றுணர்ந்தவர். காற்றையே உடலாகக்கொண்ட சித்தர். ஒரு முறை கோரக்கர் அவரிடம் ஒரு வாளைக் கொடுத்து இந்த வாளால் என்னை வெட்டுங்கள் என்றார். அந்த வாளால் அல்லமர் வெட்ட வாள் மழுங்கியதே தவிர கோரக்கர் உடலில் எந்த பாதிப்பும் ஏற்படவில்லை. அல்லமர் அந்த வாளைக் கோரக்கரிடம் கொடுத்து அதே வாளால் தம்மை வெட்டும்படி கூறினார். தேவரை கோரக்கர் வெட்டியபோது வாள் காற்றுக்குள் புகுந்து வெளி வருவதைப்போல் வெளியில் வந்ததே தவிர அல்லமர் உடலில் எந்தச் சலனமும் ஏற்படவில்லை. அல்லமர் பெருமையை உணர்ந்த கோரக்கர் அவரைப் பணிந்து அவரிடம் அருளாசி பெற்றுத் தன் தலயாத்திரையைத் தொடர்ந்தார்.

## பிரம்மரிஷியுடன் சேர்ந்து நடத்திய வேள்வி

பிரம்ம ரிஷி குருக்ஷேத்திரத்திலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்து தமிழ் கற்று சித்தர்கூட்டத்தில் சேர்ந்து தமிழ் முனி யாக வாழ்ந்து வந்தார். கோரக்கரும் பிரம்ம முனியும் தாங்கள் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்யும் ஆற்றலைப்பெற ஒரு உக்கிரமான வேள்வி நடத்தினர். எதிர்பாரா வண்ணம் யாக குண்டத்திலிருந்து மருள்மாயை, இருள்மாயை என்ற இரு பேரழகிகள் வெளிப்பட்டனர். அதனால் கோபமுற்ற முனிவர்கள் அந்த அழகிகளை சபித்தனர். பிரம்ம முனியால் சபிக்கப்பட்ட

இருள்மாயை புகையிலைச்செடியானாள். (ஹோமப்புகையிலிருந்து வெளிப்பட்டதால் அச்செடிக்கு புகையிலைச்செடி என்ற பெயர் வந்தது.) கோரக்கரால் சபிக்கப்பட்ட மருள் மாயை கஞ்சா செடியானாள் (தவசித்திகளுக்கு அமுதமாக அமைந்ததால் அது கஞ்சா செடி என்ற பெயர் பெற்றது.)

## கடைசிகால தவ வாழ்க்கை

கோரக்கரின் சிவயோகத் தலயாத்திரையில் ஒரு முறை சதுரகிரி அடிவாரத்தில் உள்ள மகாலிங்க மலைக் குகையில் தவம் மேற்கொண்டார். (அந்தக் குகை, மலை அடிவாரத்திலுள்ள தாணிப்பாறையிலிருந்து 3 கி. மீ உயரே உள்ளது) அந்தக் குகைக்கு அருகில் அவர் வழிபட்ட லிங்கமும் ஒரு நீரோடையும் உள்ளன. அந்த நீரோடை இன்றும் கோரக்கர் தீர்த்தம் என்றே அழைக்கப் படுகிறது. கோரக்கர் குகைக்கு மேலே 4 கி. மீ. உயரத்தில் மகா லிங்கேஸ்வரர் லிங்க வடிவில் இருந்து அருளாட்சி செய்துவருகிறார்.

இந்த சித்தர் சீனா சென்று அங்கு 500 ஆண்டுகள் சித்து விளையாடியுள்ளார். பின்னர் தமிழகம் வந்து 400 வருட கால தவ வாழ்க்கைக்குப் பின் தில்லைவனம் சென்று சிதம்பர ரகசியத்தை உருவாக்கியதில் போகருடன் இருந்திருக்கிறார். இந்த செய்திகளையும் போகரின் மறுவருகை பற்றியும் தமிழகத்தின் எதிர்காலம் பற்றியும் அவர் 'சந்திரசேகை 200' என்று நூலில் எழுதியுள்ளார்.

அவர் எழுதிய சதுரகிரி மகாத்மியம் என்ற நூலில் 'திருப்பழனி மல்லூர் தன்னில் போகரொடு தெண்டபாணி உருவம் செய்தோம்' என்றும் போகருக்குத் தாமே ஜீவசமாதி எழுப்பியதாகவும் கூறியுள்ளார்.

## கோரக்கர் சமாதி கூடல்

கடைசி காலத்தில் கோரக்கர் நாகைக்குத் தெற்கேயுள்ள வேளாங்கண்ணியில் 1008 ஆண்டுகள் சிவராஜயோக நிஷ்டையிலிருந்து அன்னை இராஜராஜேஸ்வரியின் திருக்காட்சி பெற்றார். அங்கிருந்து வடக்கே ஒரு கி. மீ. தூரத்திலுள்ள பொய்கை நல்லூரை அடைந்தார். பொய்கை நல்லூர் நந்தி நாதேஸ்வரர் ஆலயத்தின் வெளியில் வலது புறத்திலுள்ள வன்னி மரத்தடியில் சமாதி பூண்டு அருளாட்சி செய்துவருகிறார். (பொய்கை நல்லூர் நாகை - திருத்துறைப்பூண்டி பேருந்துவழித்தடத்தில் நாகையிலிருந்து 4 கிமீ. தொலைவில் உள்ளது.

## கோரக்கரின் முன் ஜன்ம வாழ்க்கை

அத்திரி தபோவனம் திருநெல்வேலி மாவட்டம் அம்பா சமுத்திரம் வட்டத்தில் மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் கடல் மட்டத்திலிருந்து 2500 அடி உயரத்தில் உள்ளது. இந்தத் தபோவனத்தில் தான் அத்திரி முனிவரும் அனுசுயா தேவியும் தவ வாழ்க்கை வாழ்ந்திருக்கிறார்கள். அவருக்கு எட்டு சீடர்கள் இருந்தனர் அவர்களில் கோரக்கரும் ஒருவர்.

ஒரு சமயம் அத்திரி மகரிஷி ஆழ்ந்த தவத்தில் இருந்தார். அவர் தவம் கலைந்து கண்திறந்தபோது அவர் சீடர்களில் ஏழுபேர் நீராடச் சென்றிருந்தனர். கோரக்கர் மட்டும் போகாதிருந்ததைக் கண்ட முனிவர் அவர் மட்டும் ஏன் நீராடச் செல்லவில்லை என்று கேட்டார். தானும் சென்றுவிட்டால் குருவிற்கு செய்யவேண்டிய பணிவிடைகள் தடைபடும் என நினைத்துத்தான் போகாது இருந்துவிட்டதாகக் கோரக்கர் கூறினார். கோரக்கரின்

குருபக்தியைப் பாராட்டிய மகரிஷி தாம் தவம் செய்த அத்திமரத்தடியில் தண்டத்தால் தட்டி, தம் கமண்டலத்திலுள்ள நீரைத் தெளித்து அங்கேயே கங்கையை உற்பத்தி செய்து அதில் கோரக்கரை நீராடச் செய்தார். இன்றும் அது அத்திரி கங்கை என்றே அழைக்கப்படுகிறது. எல்லா இடங்களிலும் நீர்வற்றும் கோடையிலும் இந்த அத்திரி கங்கையில் மட்டும் ஒரே நிலையில் நீர் பெருகி குடிக்கொண்டே உள்ளது. இந்த கங்கையில் நீராடுவோர் நலம் பல பெற்று நல்வாழ்வு வாழ்ந்து வருகின்றனர்.

இப்போது அம்பாசமுத்திரத்திற்கு அருகில் உள்ள ஆழ்வார் குறிச்சிக்கு மேற்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் ஆதிசிவசைலம் எனப்படும் அத்திரி மலைக்கோயில் உள்ளது. இங்குள்ள ஆதி சிவசைல நாதர் அத்திரி முனிவரால் வழிபட்டதால் அத்திரி பரமேஸ்வரர் என்றும் கோரக்கரால் வழிபடப்பட்டதால் கோரக்நாதர் என்றும் திருப்பெயர்கள் கொண்டுள்ளார். இங்குள்ள ஆறுபட்டை வடிவ லிங்க ரூபமாக உள்ள அம்பிகையின் திருநாமமும் அத்திரிபரமேஸ்வரி என்பதே ஆகும்.

கோரக்கரின் பூர்வ ஜன்ம வரலாறு திரேதாயுகத்தில் நிகழ்ந்தது. இந்த வரலாறு நமக்குப் புலப்படுத்தும் உண்மைகள்:

1. மகரிஷிகளும் சித்தர்களும் மரணமிலாப் பெருவாழ்வு வாழ்பவர்கள்.

2. மக்களுக்கு நன்மை செய்வதற்காகவும் மக்களை நல்வழிப்படுத்து வதற்காகவும் அவர்கள் ஒவ்வொரு யுகத்திலும் தாங்களே விரும்பி மறுபிறப்பெடுக்கின்றனர்.

3. அவர்கள் ஒவ்வொரு யுகத்திலும் பிறந்து கொஞ்சகாலம் மக்களிடை வாழ்ந்து ஜீவ சமாதி அடைகின்றனர்.

4. ஜீவ சமாதி அடைந்தபிறகும் அருவமாய் இருந்து மக்களுக்கு அருள் புரிந்து வருகின்றனர்.

5. அருபியாக வாழ்ந்து வரும் கோரக்க சித்தரையோ அல்லது அகத்தியர், திருமூலர் போன்ற வேறு ஒரு சித்தரையோ குருவாகக் கொண்டு அவரையே தான் வழிபடும் கடவுளாகவும், வழிகாட்டியாகவும் கொண்டு முழு நம்பிக்கையுடன் அவரை வழிப்பட்டுவந்தால் இப்பிறப்பிலேயே இன்பமான வாழ்வும், மறுபிறப்பில்லா பெருவாழ்வும் அமையும் என்பது திண்ணம்.

# 16. சட்டை முனி

**முன்னுரை**

*சட்டை முனி திருமூலர், கொங்கணவர் கருவூரார் ஆகிய சித்தர்களுடன் வாழ்ந்திருக்கிறார். கயிலாயம் சென்று கம்பளிச்சட்டை அணிந்தவராகத் தமிழகம் திரும்பிவந்ததால் கயிலாயக் கம்பளிச்சட்டைமுனி நாயனார் என்றும் அழைக்கப்படுகிறார்.*

**முற்பகுதி வாழ்க்கை**

*சட்டை முனி சேணியர் குலத்தில் பிறந்து நீண்டகாலம் வாழ்ந்தார் என்று அமுத கலை ஞானம் என்ற நூலில் அகத்தியர் குறிப்பிட்டுள்ளார். இவர் சேணியர் குலத்தில் பிறந்து நெசவுத் தொழில் செய்து வந்தார். மெய்ஞ்ஞானம் பெற்று சதுரகிரிசென்று ஒரு பிராமணர் உடலில் புகுந்து ஒரு கற்ப காலம் வாழ்ந்தார் என்று 'நொண்டிச்சிந்து என்னும் வாதகாவியத்தில்' கருவூரார் கூறியுள்ளார். (பாடல்கள் 586 587)*

*போகர் 'சத்தகாண்டம் 7000' என்ற நூலின்படி சட்டைமுனி ஆவணிமாதம் மிருகசீரிடம் நட்சத்திரம் 3 ஆம் பாதத்தில் மிதுன ராசியில் சிங்களவர் தேசத்தில் ஒரு தேவதாசியின் மகனாகப் பிறந்தார். பிழைப்புதேடி தாய் தந்தையருடன் தமிழகம் வந்தார் (பாடல்கள் 5874 5875)*

அகத்தியர் 'பெருநூல் காவியம்' 433, 434, 435 ஆம் பாடல்களின் படி 'சட்டைமுனி கோயில் வாயில்களில் நின்று தாம்பாளம் ஏந்திப் பிச்சை எடுத்துப் பெற்றோரைக் காப்பாற்றினார். திருமணம் செய்துகொண்டு குடும்பம் நடத்திப் பிள்ளைகளும் பெற்றார். இவற்றிற்குப் பிறகு ஒரு நாள் இந்தியாவின் வடகோடியிலிருந்து வந்த சங்கு பூண்ட சன்யாசி ஒருவரை சந்தித்தார். அவரால் கவரப்பட்டு அவருடனேயே வடநாடு சென்று அந்தத்தவயோகியின் தவக்குடிலிலேயே கொஞ்சகாலம் வாழ்ந்து வந்தார். அந்த சன்யாசியோடு கயிலாயம் முதல் கன்யாகுமரிவரை கால் நடையாகவே சுற்றிவந்திருக்கிறார். அந்த ஞான குருவே சட்டை முனியின் முதல் வழிகாட்டி எனலாம்.

## சித்தரான சட்டைமுனி

பிறகு போகரிடம் தீட்சை பெற்று சித்தநெறியில் ஈடுபட்டார். சித்தரான பிறகு கருவூரார் தொடர்பும் கொங்கணவர் தொடர்பும் பெற்றார். சட்டை முனியும் கொங்கணவரும் ஒருவரை ஒருவர் மிகவும் அதிகமாக நேசித்திருக்கிறார்கள். ஞானம், மருத்துவம் போன்றவற்றை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டுள்ளனர். கயிலாயக் கம்பளிச்சட்டை முனி பின் நூறு' என்ற நூலின் 40, 80, 87, 88,95, 97 ஆகிய பாடல்களில் அவர் கொங்கண வரை மிகவும் புகழ்ந்துள்ளார். குறிப்பாக 40 ஆம் பாடலில் கொங்கணவர் வான் என்ற அந்தரானந்தர் பெற்ற பூரணம் என்றும் கூறுகிறார். கடைசியாக அகத்தியரிடம் தீட்சைபெற்று நிறைநிலை சித்தரானார்.

சட்டைமுனி தன் ஞான நூல்களில் மனித குரு யாரையுமே தன் குருவென்று குறிப்பிடவில்லை. சின்மயமேதன் குரு என்று கூறியுள்ளார். இருப்பினும் அகத்தியரின் 'பெருநூல்காவியம்

*12000'ல் சட்டைமுனி அஸ்வினி தேவர்களிடம் 'நான் யாரோ வென்று எண்ணவேண்டாம். நான் போகருடைய சீடன்' என்று கூறியதாக ஒரு குறிப்பு உள்ளது.*

### சமாதி கூடல்

*சட்டை முனி நீண்ட காலம் வாழ்ந்து சீர்காழியில் சமாதி கூடியுள்ளார் என்று ஜனன சாகரத்தில்' போகர் கூறியுள்ளார். திருவரங்கத்தில் அரங்கனுடன் கலந்துவிட்டார் என்று சித்த மருத்துவ ஆய்வு நூல்கள் கூறுகின்றன. அவர் அரங்கனுடன் இணைந்துவிட்டார் என்பதற்கு ஒரு புராணக்கதையும் உள்ளது அது வருமாறு:*

### அரங்கனுடன் ஐக்கியமான கதை

*சட்டைமுனி சஞ்சாரகதியில் கால்நடையாகவே பல ஊர்களையும் சுற்றிக்கொண்டு வரும் வழியில் ஓரிடத்தில் ஸ்ரீரங்கம் கோவிலின் கோபுர கலசங்கள் தெரியக் கண்டார். இரவு வருவதற்குள் எப்படியும் அரங்கனை தரிசித்துவிடவேண்டும் என்ற ஆர்வத்தில் அதிவேகமாக நடந்தார். அவர் கோவில் வாயிலை அடைந்தபோது நள்ளிரவு வழிபாடும் முடிந்து கோவில்கதவுகள் மூடப்பட்டிருந்தன.*

*மிகுந்த தாபத்துடன் கோயில் வாயிலில் நின்று கொண்டு 'அரங்கா, அரங்கா, அரங்கா' என்று மூன்றுமுறை கூவினார். அவர் அழைத்த மாத்திரத்தில் கோவில் மணிகள் அடித்தன. மேளதாளங்களும் முரசுகளும் முழங்கின. கோவில் கதவுகள் தாமாகவே திறந்து கொண்டன. நடு இரவில் அந்தப் பேரொலிகளால் எழுப்பப்பட்டு ஊர் மக்களும் அர்ச்சகர்களும் திரண்டு கோவிலுக்கு*

வந்தனர். கோவில் கதவுகள் திறந்திருந்தன. அரங்கன் அருகில் 'சட்டை முனி அமர்ந்திருந்தார். அரங்கனின் ஆபரணங்களும் சங்கு சக்கரங்களும் சட்டை முனிமேல் இருக்கக்கண்டனர்.

அர்ச்சகர்கள் சட்டை முனிமேலிருந்த அணிகலன்களை யெல்லாம் கழற்றி அரங்கனுக்கு அணிவித்துவிட்டு அவரைத் திருடன் என்று அரசன் முன் கொண்டுபோய் நிறுத்தினர். அவரை அரசன் விசாரித்தபோது அவர், 'எனக்கு எதுவும் தெரியாது, அரங்கனுக்குத்தான் தெரியும்' என்றார். அரசன் ஆணைப்படி அவரை கோவிலுக்கு இழுத்துச் சென்று அரங்கன் முன் நிறுத்தினர். சட்டைமுனி தம்மை மறந்து 'அரங்கா, அரங்கா' என்று மூன்று முறை கத்தினார்.

உடனே கோவில் மணிகள் ஒலித்தன. மேளதாங்களும் முரசுகளும் முழங்கின. அரங்கன் சிலை மேலிருந்த ஆபரணங்களும் சங்குசக்கரங்களும் தாமாகவே கழன்று வந்து சித்தரை அலங்கரித்தன. அடுத்தநொடியில் சட்டை முனி ஒளி மயமாக மாறி அரங்கனுடன் கலந்தார்.

இந்த அதிசயத்தைக்கண்ட அனைவரும், 'அரங்கனும் சட்டை முனியும் வேறுவேறல்லர். தானே சட்டை முனி என்பதை அனைவருக்கும் நிரூபித்துக்காண்பிக்க அரங்கன் நடத்திய திருவிளையாடலே இது' என்று உணர்ந்தனர். இன்றும் திருவரங்கத்தில் சட்டை முனியே அரங்கனாக இருந்து அருளாட்சி செய்து வருகிறார் என்று பல வைணவப் பெரியார்கள் கருதுகின்றனர். சைவப் பெரியார்களும் சட்டைமுனி சீர்காழியில் சிவப்பரம்பொருளாயிருந்து அருள்புரிந்து வருகிறார் என்று கருதுகின்றனர்.

## சட்டை முனி பற்றிய மாறுபட்ட இரு கதைகள்

சித்தர்களின் ரகசியங்களை எல்லோரும் புரிந்து கொள்ளும் படி வெளிப்படையாக சட்டை முனி 'தீட்சாவிதி' என்ற நூலை எழுதினார். அதைப்பற்றி உரோம ரிஷி கோபமாக விமர்சனம் செய்ய தலைமை சித்தரான திருமூலர் அந்த நூலையே கிழித்தெறிந்து விட்டார். தம்மைப் பழிவாங்க சட்டை முனி தம்முடைய நூல்களை கிழித்தெறிந்துவிடுவார் என்று எண்ணிய உரோம ரிஷி தம் நூல்களை எல்லாம் தம்முடைய குருவான காகபுஜண்டரிடம் கொடுத்தார். காகபுஜண்டரும் அவற்றைத் தம் காக்கைச்சிறகுகளில் பத்திரமாக மறைத்து வைத்திருந்து அகத்தியரிடம் கொடுத்தார். இது ஒரு கதை.

மற்றொரு கதை: கயிலாய கம்பளிச் சட்டை முனியும் உரோம ரிஷியும் ஒருவரே. இவர் உடம்பில் 3.5 கோடி உரோமங்கள் உள்ளன. இவர்பல யுகங்களாக வாழ்ந்து வருகிறார். இவர் உடம்பிலிருந்து ஒரு உரோமம் உதிர்ந்தால் படைப்புத் தொழில் புரியும் ஒரு பிராமன் இறப்பான். இந்த உரோம ரிஷியாகிய கம்பளிச் சட்டை முனி தம் வாழ்நாளில் பல பிரம்மன்களைக் கண்டவர். இன்னும் கோடிக்கணக்கான பிரம்ம தேவர்களை காண இருப்பவர். இப்போதும் வாழ்ந்து கொண்டிருப்பவர். இன்னும் பல யுகங்கள் வாழ இருப்பவர்.

இந்த இருவேறு கதைகளும் சித்தர் இலக்கியங்களிலும், சித்த மருத்துவ நூல்களிலும் இடம் பெற்றுள்ள கதைகள்தான். எந்த கதை உண்மைக் கதை என்பது தான் தெரியவில்லை.

# 17. பாம்பாட்டிச் சித்தர்

பாம்பாட்டிச் சித்தர் திருக்கோகர்ணத்தைச் சேர்ந்தவர். (மத்திய அரசு வெளியிட்டுள்ள நா. கதிரைவேல் பிள்ளையின் தமிழ் மொழி அகராதிச் செய்தி) இவர் பாம்பு பிடிப்பதையே தொழிலாகக்கொண்ட ஜோகி இனத்தில் கார்த்திகை மாதம் மிருகசீரிடம் நட்சத்திரத்தில் பிறந்தவர்.

இவர் சிறுவனாய் இருந்தபோதே மலைப் பகுதியிலிருந்த கொடிய நச்சுப் பாம்புகளையெல்லாம் பிடித்து ஆட்டியவர். இவரது ஆற்றலை அறிந்த சித்த மருத்துவர்கள் நால்வர் இவரிடம் வந்து, மருந்து தயாரிக்க நவரத்தின பாம்பொன்றைப் பிடித்துத்தர வேண்டும் என்று கேட்டனர். (நவரத்தின பாம்பு என்பது ஒரு முறை கூட நஞ்சை வெளிப்படுத்தாது நீண்டகாலம் வாழ்ந்து முடித்த நாகம். கடைசிகாலத்தில் அதன் உடலே குறுகி மிகவும் குட்டையாகி இருக்கும். அதன் நஞ்சுமுழுவதும் அதன் தலைபாகத்தில் கட்டுப்பட்டு ஒளி மிக்க மாணிக்கமாக மாறியிருக்கும். அந்த நாகம் இரைதேட நடு இரவில்தான் வெளிவரும். தன் தலையில் உள்ள மாணிக்கத்தைக் கக்கி அதன் ஒளியில் தான் இரைதேடும் (வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சர்யம் காத்துத் தம் விந்தைக் கட்டி மூலாதாரத்தில் உள்ள குண்டலினிசக்தியை சகஸ்ரதளத்திற்குக் கொண்டு சென்று நிறுத்தி தம் புருவமையத்தில் உள்ள மனோன்மணி பீடத்தில் தம் ஆன்ம ஒளியைக் கண்டவண்ணம்

ஜீவசமாதியில் ஆழ்ந்திருக்கும் மகாசித்தர்களை ஒத்தது இந்த நவரத்தினப் பாம்பு)

பாம்பாட்டிச் சித்தர் நவரத்தினப் பாம்பைப்பிடிக்க மலைக்காடுகளிலெல்லாம் அலைந்து திரிந்து அன்று நடு இரவில் அதன் புற்றையும் கண்டுபிடித்துவிட்டார்.

'புற்றருகில் சென்று மல்லோ சித்தர்தாமும்
புனித முள்ள நவரத்தின பாம்புதன்னை
வெற்றியுடன் தான்பிடக்கப் போகும்போது
வேதாந்தச் சட்டைமுனி அங்கிருந்தார்'

(போகர் சத்தகாண்டம் 7000 பாடல் 3577)

சட்டை முனியின் ஒளிவீசும் ஞானதேகத்தைப் பார்த்த மாத்திரத்தில் பாம்பாட்டியின் மன இருள் அகன்றது. சட்டை முனி அவரைப்பார்த்து, 'மகனே! புறவுலகில் உலவும் பாம்புகளை அடக்கவல்ல நீ உன்னுள் மூலாதாரத்தில் சுருண்டு கிடக்கும் வாலைப் பாம்பைத் தட்டி எழுப்பப் பிறந்தவன். இந்தப் புற்றில் உள்ள நவரத்தினப் பாம்பைவிட உன்னுள் உள்ள குண்டலினிப் பாம்பு ஆயிரம் மடங்கு ஒளிமிக்கது. உன் ஞானக் கண்ணைத் திறந்து உனக்கு ஆன்மவழிகாட்டக் கூடியது, என்று கூறி அவனுக்குக் குண்டலினி தீட்சையும் அளித்தார். அந்த நொடியே தவத்தில் இறங்கிய பாம்பாட்டிச் சித்தர் கொஞ்சகாலத்திலேயே அஷ்ட மாசித்திகளையும் பெற்று மகாசித்தரானார். பிறகு ஊர் ஊராகச் சுற்றித் திரிந்துகொண்டு சித்துக்கள் புரிந்து மக்களை மகிழ்வித்ததோடு மக்களின் பிணிகளையும் போக்கிவந்தார்.

செல்லும் வழியில் ஒருகுறு நாட்டு மன்னன் இறந்து கிடந்ததைக் கண்டார். அவனைச்சுற்றி அரசியும் மற்றவர்களும் அழுது கொண்டிருந்தனர். அருள் உள்ளம் கொண்ட அந்த இளம் சித்தர்

அவர்களுக்கு ஆறுதல் அளிப்பதற்காக தன் கல்பதேகத்தை ஓரிடத்தில் பத்திரமாக ஒளித்துவைத்துவிட்டு சூக்கும சரீரத்துடன் ஒரு செத்தபாம்பை எடுத்துக்கொண்டு அரண்மனைக்குள் வந்து அந்தப் பாம்பை மன்னன் மேல் வீசி எறிந்தார். மன்னனின் உடலின்மேல் பாம்பு விழுந்ததைக் கண்ட அனைவரும் பயந்து அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டனர். அரசிமட்டும் அசையாமல் அரசன் உடலின் அருகிலேயே இருந்தாள்.

அடுத்த நொடியில் பாம்பாட்டிச் சித்தர் அந்த அரசன் உடலில் புகுந்து மன்னனாக விழித்தெழுந்தார். அதே சமயத்தில் இறந்த மன்னனுடைய ஆன்மா பரகாயப்பிரவேசமுறையில் இறந்துகிடந்த பாம்பின் உடலில் புகுந்து வெளியே ஓடத்தொடங்கியது. அந்த ஆன்மா மன்னனாக வாழ்ந்த போது முறைதவறிய சிற்றின்பத்தில் அளவுக்கு மீறி ஈடுபட்டு அதனாலேயே உடல் கெட்டு நோய்வாய்ப்பட்டு இறக்க நேர்ந்தது. அப்போது மன்னன் உடலிலிருந்த சித்தர் அந்த பாம்பைப்பார்த்து 'மன்னா! இன்னும் உன் ஆசைகள் அடங்கவில்லையா?' என்று கேட்க அந்தப்பாம்பும் சித்தருக்கு அடங்கி படமெடுத்து ஆடிக்கொண்டு நின்றது. சித்தர் அந்தப் பாமபைப்பார்த்து "ஆடு பாம்பே" என்று முடியும் 129 பாடல்கள் அடங்கி யஒரு சதகத்தைப் பாடி முடித்தார்.

அந்த சதகம் 1. கடவுள் வணக்கம், 2. குருவணக்கம், 3. பாம்பின் சிறப்பு, 4. சித்தர் வல்லபம், 5. சித்தர் சம்வாதம், 6. பொருளாசை விலக்கல் 7. பெண்ணாசை விலக்கல், 8. அகப்பற்று நீங்குதல் என்னும் எட்டு தலைப்புகளில் எளிய தமிழில் பாமரரும் புரிந்து கொண்டு ஞான மார்க்கத்தில் சென்று சித்தி அடையும் வண்ணம் அமைந்துள்ளது. பாம்பாட்டிச் சித்தர் இந்த ஞான நூலைப் பாடி முடித்துவிட்டு அரசன் உடலை விடடு வெளியேறித்தன் கல்ப உடலில் புகுந்துத் தம் சித்தர் வாழ்க்கையைத் தொடங்கினார்.

தன்னை யாரென்று வெளிக்காட்டிக்கொள்ளாமல் மக்கள் பிணி தீர்த்துக்கொண்டும் அவர்களுக்கு அறநெறிகளைப் புரிய வைத்துக்கொண்டும் ஊர் ஊராகச் சென்றார். விருத்தாச்சலம் சென்றவுடன் தான் பூதவுடலை பிரியும் நேரம் வந்ததை உணர்ந்து அங்கு கோவில்கொண்டுள்ள பழமலை நாதருடன் ஐக்கியமானார் என்று பண்டைய சித்த மருத்துவ ஆய்வு நூல்கள் கூறுகின்றன. இவர் திரு ஞானம் என்ற இடத்தில் சமாதி பூண்டுள்ளார் என்றும் மருதமலையில் ஜீவசமாதி அடைந்துள்ளார் என்றும் பல நூல்கள் கூறுகின்றன. மருத மலையில் முருகன் சன்னதிக்கு அருகிலேயே பாம்பாட்டிச் சித்தர் குகை என்று ஒரு குகைக் கோவில் உள்ளது.

# 18. தேரையர்

## இளமை வாழ்க்கை

தேரையர் தம் பெயரைத் தேரன் என்றே பல இடங்களிலும் குறிப்பிட்டுள்ளார். போகரும் கருவூராரும் அவர் பிராமண குலத்தவர் என்று கூறியுள்ளனர் (பாடல் : போகர் ஏழாயிரம் 5942; கருவூரார் வாதகாவியம் 621). அவர் பாலாற்றின் வடக்கரையில் உள்ள திருமலைச்சேரியில் பிறந்தவர். தந்தை பெயர் நம்பூபதி. இவர் சூரத்தில் வாழ்ந்த தரும சௌமியர் என்ற புத்த மதத்துறவியிடம் மருத்துவம் பயின்றார். அத்துறவியின் வழிகாட்டுதலின்படி அகத்தியரின் சீடரானார் என்று பல மருத்துவ ஆய்வு நூல்கள் கூறுகின்றன.

அகத்தியர் தகுந்த சீடன் ஒருவனைப் பெறவேண்டி பொதிகை மலை யிலிருந்து இறங்கி ஊருக்குள் வந்தார். வழியில் ஔவையாரை சந்தித்தார். முனிவரிடம் ஔவையார் ஒரு சிறுவனைக் காண்பித்து 'இவன் முற்பிறப்பில் இராமதேவர் என்ற சித்தராக இருந்தவன். இப்போது இவன் ஒரு வாய்பேசாத ஊமையாக என்னிடம் வந்துள்ளான். இவன் உங்களுக்கு ஏற்ற சீடனாக இருப்பான்' என்று கூறினார். தேரன் அகத்தியரின் சீடனானான்.

## கூன் பாண்டியனின் கூனை நிமிர்த்திய கதை

ஒரு பாண்டிய மன்னனின் முதுகு கூனலாய் இருந்தது. அவன் கூனலை நிமிர்க்க தேரனை அழைத்துக்கொண்டு அகத்தியர்

சென்றார். மன்னருக்குத் தேய்க்க ஒரு பெரிய கொப்பறையில் தைலம் காய்ச்சப்பட்டது. அவசரமாக மன்னன் அழைக்க அகத்தியர் சீடனிடம் 'கவனமாய் பார்த்துக்கொள்' என்று கூறிவிட்டு மன்னனிடம் சென்றார். அப்போது எண்ணெய்க் கொப்பறைக்கு மேலே இருந்த தளத்தில் மூங்கிலால் வில் போல் வளைத்து செய்யப்பட்டிருந்த பல்லக்குக் கொம்பு ஒன்று போடப் பட்டிருந்தது. தைலம் கொதித்துக்கொண்டிருந்தபோது பல வளைவுகளோடிருந்த பல்லக்குக் கொம்பு கொஞ்சம் கொஞ்சமாக நிமிர்ந்து நேராகி வந்தது. அதைக்கண்ட தேரன் தைலம் பதத்திற்கு வந்துவிட்டதை யூகித்தறிந்து அடுப்பை அணைத்து விட்டான். திரும்பி வந்த அகத்தியர் திடுக்கிட்டு "ஏன் நெருப்பை அணைத்தாய் என்று கேட்க சீடன் மேல் தளத்தில் நிமிர்ந்து கிடந்த பல்லக்குக்கொம்பை குருவிடம் காட்டினான். அதைக்கண்ட அகத்தியர் 'என் சீடனான ஊமைப் பிள்ளைக்கு பேச்சுதான் வரவில்லையே தவிர மற்ற எல்லா வகையிலும் அவன் கெட்டிக் காரனாய் இருப்பதைக் கண்டு நான் பெருமைப்படுகிறேன்' என்று கூறினார். அதுமுதல் அவர் வைத்தியம் பார்க்க எங்கு சென்றாலும் அவனையும் அழைத்துச்செல்வது வழக்கமாகி விட்டது.

## திரணாக்கியரின் தலைநோயை நீக்கியது

ஒரு சமயம் சங்கப்புலவர்களில் ஒருவரான திரணாக்கிய முனிவர் தாங்க முடியாத தலைவலியால் துடித்துக்கொண்டிருந்தார். அதற்குக் காரணம் அவரது மண்டை ஓட்டிற்குள் ஒரு தேரை இருந்ததுதான். அகத்தியர் அவர் மண்டை ஓட்டைப் பிளந்து தேரை இருப்பதைக் கண்டார். ஒரு இடுக்கியால் அவர் அந்தத் தேரையை எடுக்க முனைந்தபோது, அப்படிச் செய்தால் புலவரின் மூளையே பாதிக்கப்படும் என்பதை உணர்ந்த தேரன் அகத்தியர்

கையைப் பிடித்து தடுத்து நிறுத்தி விட்டு ஒரு குழிவான தாம்பாளத்தில் தண்ணீரைக் கொண்டுவந்து தேரை பார்க்கக்காட்டினான். தண்ணீரைக்கண்ட தேரை உடனே தாம்பாளத்தில் தாவிக்குதித்தது. உடனே அகத்தியர் சந்தானகரணி என்ற மூலிகைச் சாற்றைக் கொண்டு மண்டை ஓட்டை புலவரின் தலையில் பொருத்தினார். புலவர் தலைநோய் நீங்கப் பெற்றார். தேரன் இப்படி எளிமையாகத் தேரையைத் தலையிலிருந்து எடுத்ததைக் கண்டு மகிழ்ந்த குருநாதர் தன் சீடனுக்குத் தேரையன் என்று பெயர் சூட்டியதுடன் அவனது ஊமைத் தன்மையைப் போக்கி அவனை நன்றாகப் பேசவும் வைத்தார். இந்த வரலாறும் அகத்தியர் 12000 என்ற நூலில் உள்ளது.

சங்கப் புலவரான இந்தத் திரணாக்கியர்தான் அகத்தியத்தின் வழிநூலான தொல்காப்பியத்தை இயற்றிய குருவான அகத்தியரால் தொல்காப்பியன் என்று சிறப்பிக்கப்பெற்றார். இத்தொல்காப்பியர் தான் அகத்தியரால் தலைநோய் நீங்கப்பெற்றவர் என்பது அகத்தியரே தம் நூலில் கூறியிருக்கும் உண்மை.

நக்கீரருக்குப் பத்தாண்டு காலம் தீராத தலைவலி இருந்ததென்றும் நச்சினார்க்கினியரின் அழைப்பிற்கிணங்க அகத்தியரும் தேரையரும் வந்து அவரது நீண்டகாலத் தலைவலியை நீக்கினார்கள் என்றும் சில மருத்துவ ஆய்வு நூல்களில் கூறப்பட்டுள்ளன.

## தேரையர் செத்துப் பிழைத்த கதை

தேரையர் நிறைநிலை சித்தராகவும் மருத்துவராகவும் வளர்ந்துவிட்டதால் அவரது குருநாதரே அவரைத் தனித்திருந்து செயல்படும்படி கூறி ஆசிவழங்கி அனுப்பிவைத்தார். தேரையரும்

அகத்தியரைவிட்டகன்று நாகலா மலைப்பகுதியில் தவக்குடில் அமைத்துக்கொண்டு மக்களுக்கு மருத்துவ உதவி செய்து கொண்டும், சீடர்களை சித்த நெறியில் வளர்ச்சிபெற வழிகாட்டிக்கொண்டும் வாழ்ந்துவந்தார். அப்போது நாட்டில் ஒருபெரும் பஞ்சம் ஏற்பட்டது. சிறிது தங்கம் தயாரித்துக் கொடுத்தால் அதை விற்று நாங்கள் பஞ்சம் போக்கிக்கொள்வோம் என்று மக்கள் வேண்ட தேரையர் மிகப்பெரிய நாக மலையையே தங்கமாக்க முற்பட்டார். அவரது சீடர்கள் அம்மலையைச் சுற்றி துருத்திகளை வைத்துத் தீ மூட்டி ஊதினார்கள். மலையைச் சுற்றி உண்டான அதிகவெப்பத்தையும் புகையையும் தாங்க முடியாமல் அம்மலையில் வாழ்ந்த மிருகங்கள் நான்கு பக்கமும் சிதறிஓடின; பறவைகள் பறந்தோடின. அந்த மலைமீது தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகள் அகத்தியரிடம் வந்து உங்கள் சீடனால் நாங்கள் தவம்புரிய இடமின்றி தவிக்கிறோம் என்று முறையிட்டனர். அதனால் கோபங்கொண்ட அகத்தியர் தேரையரை அழைத்து வரச்செய்து அவரது கால்களைப்பிடித்து அவர் உடலை இரண்டாகக் கிழித்தெறிந்துவிட்டார்.

தனக்கு இப்படி ஒரு ஆபத்து வரக்கூடும் என்பதை முன்னரே யூகித்து அறிந்திருந்த தேரையர் தன் முக்கிய சீடர்கள் இருவருக்கு பிரிந்த உடல் சேரவும் மீண்டும் உயிர் பெற்று எழவும் செய்யும் மூலிகை மருத்துவத்தைக் கற்றுக்கொடுத்திருந்தார். அந்தச் சீடர்களும் அவர் கூறியிருந்தபடி மூலிகை மருத்துவம் செய்து தங்கள் குருவை உயிர் பெற்று எழச் செய்துவிட்டார்கள்.

## குருவுக்குப் பார்வை கொடுத்த கதை

பிழைத்தெழுந்த தேரையர் மீண்டும் குருவின் கண்களில் படாதவாறு தொலைவில் உள்ள ஒரு இருண்ட காட்டில் காட்டு

மனிதனைப்போல் வாழ்ந்து வந்தார். அந்தக் காலகட்டத்தில் அகத்தியருக்குப் பார்வைக் குறை ஏற்பட்டது. அவரது சீடர்கள் அருகில் உள்ள காட்டில் ஒரு காடடுவாசி மூலிகைகளைக் கொண்டு எல்லா வியாதிகளையும் தீர்த்து வருகிறான். அவனை அழைத்து வரலாமா' என்று கேட்க அகத்தியரும் அனுமதித்தார். அவன் தேரையன்தானா என்று சோதித்தறிய குருநாதர் "நீங்கள் போகும் போது இரவில் புளியமரத்தடியில்தான் உறங்கவேண்டும்' என்று கட்டளையிட்டார்.

காட்டுவழியில் பல நாள் நடந்து சென்று சீடர்கள் காட்டுவாசியைக் கண்டுபிடித்தனர். அந்தக் காடடுவாசி உடல் எல்லாம் உரோமம் வளர்ந்து கரடிபோலக் காட்சியளித்தான். சீடர்கள் இருமி இருமி இரத்தவாந்தி எடுத்ததைக் கண்ணுற்ற காட்டுவாசி ஏன் இப்படி? என்று கேட்க சீடர்கள் 'எங்கள் குருவின் ஆணைப்படி நாங்கள் நடந்துவந்த நாளெல்லாம் புளியமரத்தடியிலேயே உறங்கி வந்தோம்' என்றனர். காட்டுவாசி "நீங்கள் திரும்பிச்செல்லும்போது வேப்பமரத்தின் நிழலில் மட்டுமே உறங்குங்கள். குருவிடம் போய்ச் சேர்வதற்குள் குணமாகிவிடுவீர்கள். உங்களுக்கு வேறு மருந்து தேவையில்லை". என்று கூறி நீங்கள் எதற்காக என்னை நாடி வந்தீர்கள்? என்று கேட்டான்.

'எங்கள் குருநாதர் பார்வைக் கோளாறால் அவதிப்படுகிறார். உங்களால்தான் அவரைக் குணப்படுத்த முடியும் என்று கருதியே வந்தோம்'.என்றார்கள். தன்னை யாரென்று தெரிந்துகொள்ளவே குருநாதர் அழைத்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட தேரையர். 'நான் இரண்டு நாளில் வருகிறேன். நீங்கள் போய்வாருங்கள்' என்று கூறி சீடர்களை அனுப்பிவைத்தார்.

அவர்கள் திரும்பும் வழியில் வேப்பமர நிழலிலேயே கண்ணுறங்கி நலமாகப் போய்ச் சேர்ந்து குருநாதரிடம் டந்தவைகளை ஒன்றுவிடாமல் கூறினர். அகத்தியரும் அந்தக்காட்டுவாசி தேரையர் என்று தெரிந்துகொண்டார்.

காட்டுவாசி தான் கூறியபடி இரண்டு நாள் கழித்துப் புறப்பட்டு அகத்தியரிடம்வந்து அவர் கால்களைத் தொட்டு வணங்கினான். அவர் கண்களில் மருந்து பிழிந்து பார்வை பெறவும் செய்தான். தன்னிடம் வந்துள்ள கரடி மனிதன் தேரையர்தான் என்பதை மேலும் உறுதி செய்துொகள்ள அகத்தியர் அவனிடம், 'யாராலும் கண்டுபிடிக்கக்கூட முடியாத கண்வெடிச்சான் மூலிகை எனக்கு வேண்டும். அதை உன்னால் கொண்டுவரமுடியுமா' என்று கேட்டார். நான் நிச்சயம் கொண்டு வந்து தருகிறேன் என்று கூறி குருநாதரிடம் அவன்விடைபெற்றுச் சென்றான்.

வெளிச்சென்ற காட்டுவாசி பொதிகைமலைப் பகுதிகள் முழுவதையும் தேடி பல்வேறு வகையான அரிய மூலிகைளையும் அவற்றின் பயன்களையும் கண்டுபிடித்தான். இந்த முயற்சியில் காட்டுவாசிாக உள்ள தேரையர் மூலிகை மருத்துவத்தின் தந்தையாகி விட்டார் என்றே கூறலாம். கடைசியில் பெரிகை மலையின் உச்சப்பகுதியில் ஒரு மலையில் கண்வெடிச்சான் மூலிகைச் செடி இருப்பதையும் கண்டுபிடித்தார். அந்த மூலிகையைப் பறித்தால் அதிலிருநது வெளிப்படும் நச்சுப்புகையால் பறித்தவனுடைய கண்களே அவிந்துவிடும் என்பது அவருக்கு நன்றாகவே தெரியும். அதனால் அவர் அங்கேயே ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து அன்னை பராசக்தியை வேண்டி 'அன்னையே' என் குருநாதர் எனக்கு வைத்துள்ள தேர்வில் நான் வெற்றிபெற நீயே எனக்கு அருள் புரிய வேண்டும்' என்று வேண்டினார். சிறிது நேரத்தில் "தேரையா! இதோ

நீ கேட்ட மூலிகை' என்று அசரீரி ஒலித்தது. கண் விழித்துப் பார்த்த தேரையர் முன் அந்த மூலிகைக் கொத்து ஒன்று அதன் நச்சுத்தன்மை வெளிப்படாவண்ணம் பத்திரமாக ஒரு இலையில் சுற்றிவைக்கப் பட்டிருந்தது. நன்றியுடன் அன்னை பராசக்தியை வழிபட்டுவிட்டுத் தேரையர் அந்த மூலிகைச் சுருளை அகத்தியர் முன் கொண்டு போய் வைத்தார்.

இந்த குரு - சீடர்களிடையே இருந்த ஒளிவுமறைவு இதற்கு மேலும் நீடிக்கவில்லை. அகத்தியர் தேரையரை அன்புடன் கட்டித்தழுவிக்கொண்டு "அன்புத் தேரையனே! நான்வைத்த எல்லா சோதனைகளிலும் நீ தேறி விட்டாய். நீ இப்போது பொதிகை மலையில் நடத்திய ஆராய்ச்சிகள் அனைத்தையும் தொகுத்து ஒரு மூலிகை மருத்துவ ஆய்வு நூல் எழுது. அது வருங்கால மருத்துவ உலகிற்கு முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் இருந்துவரும். சித்த மருத்துவத்தில் தேரையர் மருத்துவம் என்ற பெயரால் தனிச்சிறப்புடன் நிலைத்து நிற்கும்.' என்றுமனமாற வாழ்த்தி அனுப்பினார். குருவின் ஆணைப்படி தேரையச் பல மருத்துவ நூல்கள் எழுதியுள்ளார் அவைகளில் குணபாடகம், வைத்திய யமக வெண்பா, பதார்த்த குண சிந்தாமணி போன்ற பல மருத்துவ ஆய்வு நூல்கள் இன்றும் சித்த மருத்துவ ஆய்வாளர்களுக்கு சிறந்த் வழிகாட்டிகளாக இருந்து வருகின்றன. இருபதாம் நூற்றாண்டின் சித்தர் மருத்துவ மேதைகளில் ஒருவரான சென்னை டாக்டர் ஆர் தியாகராஜன் அவர்களின் தேரையர்பற்றிய தனி ஆய்வு நூல்கள் இதற்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

தேரையர் நீண்டகாலம் மக்கள் தொண்டும் மருத்துவப் பணியும் செய்து முடித்து பொதிகை மலையைச் சார்ந்துள்ள தோரண மலைப்பகுதியில் சமாதி பூண்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

# 19. பிண்ணாக்கீசர்

இவர் பாம்பாட்டி சித்தரின் சீடர். இவர் நாக்கு இரண்டாகப் பிளவுபட்டிருந்ததால் பிண்ணாக்கீசர் என்று அழைக்கப்பட்டார். சிவகிரி என்று சிறப்பிக்கப்படும் சென்னிமலை மீது ஒருகுகையில் வாழ்ந்திருக்கிறார். சென்னிமலை மீது நீண்ட காலம் தவமியற்றி அங்கேயே ஜீவ சமாதியும் கூடியிருக்கிறார். அதனால் சென்னிமலை சித்தர் என்ற பெயரையும் கொண்டிருக்கிறார்.

இவர் வைகாசி மாதம் சித்திரை நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் கன்னி ராசியில் பிறந்தவர். இவர் பிராமண குலத்தவர் என்று கருவூரார், வாதாகாவியத்தில் கூறியுள்ளார். (பாடல் 590)

இவர் வாழ்ந்த குகை ஒரு ஆத்திமரப்பொந்து என்றும் கூறப்படுகிறது. அடிக்கடி மலையடிவாரத்தில் உள்ள ஊருக்குள் வந்து நடுத்தெருவில் படுத்துக்கொண்டு பைத்தியக் காரனைப்போல் பிதற்றிக்கொண்டிருப்பார். பசி எடுக்கும்போது அவர்வீறிட்டு அழும் சப்தம் ஊர் முழுவதும் கேட்கும். அவர் அழுகை ஒலிகேட்டு யாராவது வந்து உணவுகொடுப்பார். உடனே சித்தர் அழுகையை நிறுத்தி சிரித்துக் கொண்டு உணவு கொடுத்தவரை வாழ்த்துவார். இதனால் சென்னி மலை ஊர்மக்களும் மகிழ்ச்சி அடைந்தனர்.

அந்த ஊரில் யாருக்காவது எதாவது நோய்வந்தால் அவர் அந்த ஆத்திமரத்தடிக்கு செல்வார். அவருக்கு பிண்ணாக்கீசர் ஒரு பிடி மண்ணை அள்ளிக்கொடுப்பார். நோயாளிக்கு அந்தந்த மண் சர்க்கரையாகவே இனிக்கும். அதை சாப்பிட்டவுடன் நோயும்

குணமாகிவிடும். அவர் சமாதி அடைந்தபிறகு அந்த ஊர் மக்கள் அந்த ஆத்திமரத்தையே சென்னிமலை சித்தராகக் கருதி வழிபட்டு வந்தார்கள். பட்டுப் போயிருந்த அந்த மரம் காலப்போக்கில் மீண்டும் துளிர்த்து செழிப்பாக வளர்ந்து விட்டது.

இப்போதெல்லாம் அந்த ஊர் மக்கள் யாருக்காவது நோய் வந்து விட்டால் அந்த மரத்தடிக்கு வந்து சித்தரை வேண்டி அம்மரத்தின் இலைகளைப் பறித்துக்கொண்டு போய் கஷாயம் வைத்து நோயாளிக்குக் கொடுப்பதாகவும் உடனே நோய் நீங்கி விடுவதாகவும் கூறப்படுகிறது.

இந்த சித்தர் சென்னிமலை உச்சியில் சமாதி பூண்டு கோவில் கொண்டுள்ளார். அந்தக் கோவில் வேல்கள் நிறைந்த வேல் கோட்டமாகக் காட்சியளிக்கிறது. அந்த வேல் கோட்டத்தின் அருகே மிகப் பழமையான குகை ஒன்றும் உள்ளது. அதன் அருகில் சரவணமாமுனிவர் என்ற வேறு ஒரு சித்தர் சமாதியும் உள்ளது.

எட்டுக்குடி முருகன் கோவில், வைத்தீஸ்வரன் கோயில், மதுரை மீனாட்சி அம்மன் கோவில் போன்ற பழங்காலத் திருக்கோவில் எல்லாம் சித்தர்களின் சமாதிக் கோவில்களாகவே உள்ளன. அவைகளில் ஒன்றான பிண்ணாக்கீசர் ஜீவசமாதியும் சென்னிமலை முருகன் கோவிலாக வளர்ந்துள்ளது. இந்த முருகன் சன்னதியிலிருந்து தான் பின்னர் தேவராயசுவாமிகள் முருகனின் ஆறுபடை வீடுகளுக்கான கந்தர் ஷஷ்டிக் கவசங்களைப் பாடியருளியுள்ளார்.

இந்த முருகன் கோவில் தரைமட்டத்திலிருந்து 1743 அடி உயரத்தில் உள்ளது. இந்த சென்னிமலை திருப்பெருந் துறையிலிருந்து 13 கி. மீ. தூரத்திலும் ஈரோட்டிலிருந்து 26 கி. மீ தூரத்திலும் உள்ளது.

# 20. உரோம ரிஷி

## பெயர்க்காரணம்

உரோமரிஷி ஞானம் முதல் பாடலில் 'மதி அமுதப் பாலினைஉண்டு கள்ளமற்ற மனத்துடன் உலகில் சித்து புரிகின்ற பெரியோர்களின் பாதங்களை நம்பியதால் 'உரோமன்' என்ற பெயர் பெற்றேன்' என்று உரோமரிஷியே கூறுகிறார். இவரது உடல் முழுவதும் உரோமம் அடர்ந்திருக்கும். அதனால் இவர் உரோமரிஷிஎன்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

## தோற்றமும் வாழ்ந்த காலமும்

போகர் சத்தகாண்டம் 7000/5699, 5871, 5872 பாடல்களின்படி அவர் செம்படவனுக்கும் குறத்திக்கும்மகனாகப் பிறந்தவர் ஆனிமாதம் கார்த்திகை நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் ரிஷப ராசியில் பிறந்தவர்.

தமிழறிஞர்களிடையே இவரது காலம் 6, 7, 8 ஆம் நூற்றாண்டுகளில் ஒன்றாய் இருக்கலாம் என்றும், இவர் 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவராய் இருக்கலாம் என்றும் இருவேறு கருத்துகள் உள்ளன. இவர் 12 தலைமுறைகள் மண்ணில் வாழ்ந்து 14 கோத்திரங்களைக் கண்டவர் என்று போகர் கூறுகிறார். கருவூரார் 71 கற்பங்கள் வாழ்ந்தவர் என்று கூறுகிறார். இவர் பல யுகங்களில் பல்வேறு பிரம்மதேவர்கள் வாழ்ந்த காலங்களில் வாழ்ந்திருக்கிறார் என்ற புராணக் கருத்தும் உள்ளது. இவைதவிர இவரது சமாதிகள் பல்வேறு திருக்கோவில்களில் இன்றும் உள்ளன. இவற்றை

யெல்லாம ஒப்பு நோக்கும்போது இவர் பல்வேறு திருத்தலங்களில் பல முறை சமாதி கூடி பல நூற்றாண்டுகள் வாழ்ந்திருக்கலாம் என்றுதான் கொள்ளவேண்டியுள்ளது.

## உரோமரிஷியின் குருநாதர்

உரோமரிஷி பரிபாஷைகாப்புச் செய்யுளில் அவர் "புசுண்டரது திருவடிகளுக்கு விடாமல் தினமும் பூசைசெய்து தாசனாகினேன்" என்று பாடியுள்ளதால் அவர் புசுண்டரது சீடன் என்பது தெளிவாகிறது. சித்தர்களின் பரம்பரையில் குருமார்கள் சீடர்களை மகன்களாகவே நடத்தியுள்ளார்கள். அந்த முறையில் உரோம ரிஷி 500 என்ற நூலில் அவர் தன்னைப் பற்றி கூறுகையில் "புசுண்டரின் பிள்ளை ரோமன்' என்று கூறியுள்ளது அவர் புசுண்டரின் சீடன் என்பதையே குறிக்கிறது.

## உரோம ரிஷியின் நூல்களும் சட்டை முனியுடன் மோதலும்

உரோம ரிஷி 100, உரோமரிஷி 500, தீட்சை 200, உரோம முனி வைத்தியம் 500, பரிபாஷை 570, பஞ்சபட்சி சாத்திரம் இவற்றோடு வேறுபல நூல்களும் இவர் எழுதியுள்ளார்.

ஒரு சமயம் சட்டைமுனி இவருடைய நூல்களை கிழித்தெறிந்து விடுவார் என்ற பயம் இவருக்கு வந்துவிட்டது. அதனால் இவர் தம் நூல்கள் அனைத்தையும் தமது குருநாதர் புசுண்டரிடம் கொடுக்க, காக்கை வடிவில் இருந்த புசுண்டர் அவற்றைத் தம் இறக்கைக்குள் மறைத்து வைத்து எடுத்துச் சென்று அகத்தியரிடம் கொடுத்தார். அகத்தியர் அவற்றைப் பொதிகை மலையில் உள்ள குகைக்குள் நீண்டகாலம் ஒளித்து வைத்திருந்து இவரிடம் திருப்பிக் கொடுத்தார் என்று உரோம ரிஷி 500 என்ற நூலில் அவர் கூறியுள்ளார். சட்டை முனியுடன் ஏற்பட்ட மோதல் பற்றிய முழுவிபரம் சட்டை முனி வரலாற்றில் இடம் பெற்றுள்ளது.

உரோம ரிஷி தவமியற்றிய இரு முக்கிய திருத்தலங்கள். உரோம ரிஷி பல சிவத்தலங்களில் நீண்ட காலம் தங்கி தவமியற்றியுள்ளார். அவைகளில் சீர்காழியும், சேரன்மகாதேவியும் குறிப்பிடத் தக்க இருத்தலங்கள்:

**சீர்காழி: காலவத்து**

மன்னன் நீண்டகாலம் தனக்குக் குழந்தை இல்லாதிருந்த குறையை உரோமரிஷியிடம் கூறினான். உரோம ரிஷி சீர்காழியில் கைலாய நாதரை நோக்கித் தவமிருந்தார். அவர் மூலம் கைலாச நாதர் 'ஆதி சேடனுக்கும்' வாயுதேவனுக்கும் இடையே போர் நடந்த பிறகு உன் எண்ணம் ஈடேறும்' என்று காலவத்து மன்னனுக்குக் கூறினார். ஆதிசேடன் - வாயுபகவான் போர் முடிந்தவுடன் கடல் கொந்தளித்து பெருகிவந்தது. அப்போது கயிலாய நாதர் தோணியப் பராக. சீர்காழியில் தோன்றி காலவத்து மன்னனுக்குக் காட்சியளித்து மகப்பேறு பெற வரமளித்தார். சீர்காழியில் உரோமரிஷி தவமியற்றியதும் கயிலாய நாதர் தோணியப் ராகத் தோன்றியதும் சீர்காழி தோணியப்பர் திருக்கோவிலில் இன்றும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

**சேரன் மகாதேவி:**

இந்திருத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ளது. இத்தலம் நவகைலாயங்களில் ஒன்றாகும். இங்கு எழுந்தருளியுள்ள ஆவுடை நாயகி உடனுறை அம்மநாத சுவாமி சுயம்புலிங்கம். இங்கு வந்த உரோமரிசி முனிவர் ஒரு ஆலமரத்தடியில் லிங்க வடிவில் இருந்து இறைவனை வழிபட்டு மறு பிறப்பில்லாத உயர்நிலையை அடைந்தார். அவர் காலத்திலேயே அம்மநாத சுவாமி திருக் கோவிலும் எழுப்பபப்பட்டது. இவ்வாறே பல தலங்களும் சென்று தவ வாழ்க்கையுடன் சிவத்தொண்டும் செய்து வந்தார்.

## உரோமரிஷி சமாதி கூடல்

பல்வேறு தலங்களிலும் தவ வாழ்க்கை வாழ்ந்ததுடன் மக்கள் தொண்டும் செய்து முடித்த பிறகு தாம் சமாதி கூடும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்து உரோம ரிஷி சதுரகிரிக்கு சென்றார். அங்கு ஆறுமலைகளுக்கும் மூன்று குகைகளுக்கும் நடுவில் உள்ள குகையில் தவக்குடில் அமைத்துக்கொண்டார். அவரது தவக்குடிலுக்கு கரடி, சிங்கம், செந்நாய், கருவாய், புலி, அரக்கர், காளி, குறலி, குட்டிச்சாத்தான், சுடலை மாடன், இருளன், வீரபத்திரன், முனி, கருப்பன் ஆகியோர் காவல் புரிகின்றனர். நாட்டில் உள்ளவர்கள் அவரை நினைத்து தியானம் செய்தால் நிச்சயம் வந்து அவர் திருவருள் புரிவார். இந்த செய்திகள் யாக்கோபு வைத்திய வாத சூத்திரம் 400 என்ற நுலில் இடம்பெற்றுள்ளன.

## உரோமரிஷி ஞானம்

உரோமரிஷி ஞானம் என்னும் 13 பாடல்களில் அவர் நமக்கு பல நல்வழிகளைக் காண்பிக்கிறார். 1. பெண்ணாசையை விட்டு மௌன யோகத்தைக் கடைபிடித்தால்தான் முக்தி கிட்டும். 2. அதற்கு முதற் படியாக பிராணாயாமம் செய்ய வேண்டும். 3. புருவமையத்தில் கருத்தை வைத்து ஆறாதாரத்தவம் புரிய வேண்டும். 4. காய், சருகு கிழங்குகளைத் தின்று கொண்டு நதிகளிலே குளித்து காடுமலைகளில் சுற்றித் திரிவதால் எந்த பயனும் இல்லை.

இவற்றால் நாம் அறிந்து கொள்ள வேண்டுவன 1. ஒருகுருவின் மூலமாகத்தான் தவயோகம் பயிலவேண்டும். 2. ஏதாவது ஒரு மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு வீட்டைவிட்டு காடுமலைகளில் அலைந்துதிரிவதால் எந்த பயனும் இல்லை. 3. உத்தமமான ஒரு குருவைப் பெற்று அவரையே தெய்வமாகவும் வழிகாட்டியாகவும் கொண்டு அவர் வழியில் தவ வாழ்வு வாழவேண்டும்.

# 21. அநாதி சித்தர்

### சுந்தரலிங்கம்

சிவப்பரம்பொருளே ஒரு லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு அநாதி சித்தர் என்ற மூல சித்தராக இருந்து ஒரு சித்தர்பரம்பரையையே உருவாக்கியுள்ளார். இந்த அநாதி சித்தர். முதன்முதலில் சதுரகிரிமல உச்சியில் ஒரு சுயம்பு சிவலிங்கமாக வெளிப்பட்டார். முதன்முதலில் அகத்தியர்தான் இந்த லிங்கத்தை வழிபட்டார். பின்னர் சட்டை முனியின் சீடரான சுந்தரானந்தரிடம் அந்த லிங்கத்தைக் கொடுத்தார். சுந்தரானந்தர் அந்தலிங்கத்தை மலை உச்சியில் பிரதிஷ்டை செய்து வழிபட்டுவந்தார். அதனால் அந்த லிங்கத்திருமேனி இன்றும் சுந்தரலிங்கம் என்றே அழைக்கப்பட்டுவருகிறது. சட்டை முனியும் கொஞ்சகாலம் சுந்தரானந்தருடன் சேர்ந்து அந்த லிங்கத்தை வழிபட்டு வந்தார். சுந்தரானந்தர் தான் இன்றும் தொடர்ந்து வழிபட்டு வருகிறார். இந்த லிங்கம் தோன்றிய பல காலத்திற்குப் பிறகு இந்த லிங்கத்திற்கு கொஞ்சம் உயரத்தில் சந்தரமகாலிங்கம் சந்தனமகாலிங்கம் என இரண்டு மகாலிங்கங்கள் தோன்றி கோயில் கொண்டுள்ளன.

### அநாதி சித்தர் பரிவார தெய்வங்களுடன் எழுந்தருளல்

சதுரகிரிக்கு அருகில் உள்ள கோட்டையூரில் பச்சைமால் என்ற மாட்டிடையன் பசுக்களின் பாலைகறந்து தன் மனைவி சடை நங்கை மூலம் விற்று வாழ்க்கை நடத்தி வந்தான். ஒரு நாள் சடை நங்கை மலைச்சரிவிலிருந்து கறந்த பாலை வீட்டுக்குக்

கொண்டுவரும்போது ஒருமுனிவர் "எனக்கு நாக்கு வறண்டு போகிறது. கொஞ்சம் பால் தருவாயா?" என்று கேட்டார். அவளும் பால்குடத்தை அவரிடம் கொடுத்தாள். கொஞ்சம் பாலை அவர் குடித்தார். இந்த நிகழ்ச்சி கொஞ்ச நாள் தொடர்ந்து நடந்தது. கொஞ்ச நாளாய் பால் குறைந்து வருவதைக்கண்டுபிடித்த பச்சைமால் மனைவியை அடித்தான். அதனால் வருத்தமுற்ற சடைநங்கை சுந்தரமகாலிங்கத்திடம் போய் 'நான் குடும்ப நன்மைக்காக இந்த தர்மம் கூட செய்யக்கூடாதா? என்று முறையிட்டாள். பால் குடித்த சித்தர் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு "சடை நங்கை! நான் அநாதி சித்தன். சித்தர் பரம்பரை ஒன்றை உருவாக்கி நான் இந்த லிங்கத்தில் குடிகொண்டுள்ளேன். நீ இன்றுமுதல் என் நவசக்திகளில் ஒன்றாக இரு. உன் அண்ணன்மார்கள் எழுவரும் ஐயன் மார்கள் என்றபெயரில் எட்டுத்திசைகளிலும் இருந்து வழிதவறிச்செல்பவர்களுக்கு நேர்வழி காட்டுவார்கள்" என்று கூறி லிங்கத்தினுள் மறைந்தார் சடை நங்கையும் ஒளிமிக்க தெய்வீக நங்கையானாள். அவள் அண்ணன்மார்கள் ஐயன்மார்களாக மாறி சதுரகிரிமலைப் பகுதியில் வழிதவறிச் செல்பவர்களுக்கு இன்றும் வழிகாட்டி வருகிறார்கள்.

தன் மனைவி தெய்வமாக மாறியதைக் கண்ட பச்சைமால் தன் தவறை உணர்ந்து திருந்தி நல்வழியில் நடக்கத் தொடங்கினான். அன்று முதல் ஒரு மாட்டின்பாலை சுந்தரலிங்கத்தின் அபிஷேகத்திற்காக சுந்தரானந்தரிடம் கொடுத்து வந்தான். ஒருநாள் அவன் மந்தையில் அந்த ஒரு பசுவை மட்டும் காணவில்லை. தேடிப் பார்த்ததில் அந்தப் பசு சதுரகிரி மலைச்சாரலில் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தது. ஒரு வேடன் அதன் பால் காம்புகளில் வாயை வைத்து பசுங்கன்றுபோல் அதன் பாலைக்குடித்துக்

கொண்டிருந்தான். சுந்தர லிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய இருந்த பாலை ஒரு வேடன் குடிப்பதா? என்று ஆத்திரப்பட்டு மாடு மேய்க்கும் கோலால் அந்த வேடனை அடித்தான். அந்த அடிபட்ட வேடனின் அலறல் ஒலி சதுரகிரிப் பகுதிமுழுவதும் எதிரொலித்தது. உடனே சுந்தரானந்தரும் சட்டைமுனியும் அங்கே வந்தார்கள். அங்கே வேடன் அநாதி சித்தராக உருமாறி நின்றார்.

பச்சைமால் உண்மை அறியாமலே முன்பு தன்மனைவியை அடித்ததையும் இப்போது சித்தரையே அடித்ததையும் சொல்லிக் கதறினான். அப்போது அநாதி சித்தர் பெரிய சிவலிங்கமாக மாறினார். பச்சைமால் ஒளியாக மாறி அந்த லிங்கத்தில் கலந்தான். கோட்டையூர் மூவரையத்தேவர் என்ற குறுநில மன்னன் அங்கே ஒரு கோவிலும் கட்டினான். அக்கோவிலில் மூலவர் மகாலிங்கேஸ்வரர் அருளாட்சி செய்து வருகிறார். சதுரகிரி சித்தர்கள் இன்றும் சுந்தரலிங்கத்தையும் மகாலிங்கேஸ்வரரையும் வழிபட்டு வருகிறார்கள்.

# 22. சுந்தரானந்தர்

சுந்தரானந்தர் சதுரகிரி மலையில் ஆதிசித்தரான அநாதி சித்தரின் அருள்பெற்றவர். சதுரகிரி மலை உச்சியில் அநாதி சித்தரை சுந்தரலிங்கமாக பிரதிஷ்டை செய்து அரூபநிலையிலிருந்து இன்றும் வழிபட்டுவருபவர்.

அவர் ரேவதி நட்சத்திரம் மூன்றாம் பாதத்தில் பிறந்தவர் என்றும், கிஷ்கிந்தா மலை உச்சியில் வாழ்ந்துவரும் நவகண்ட ரிஷியின் பேரன் என்றும் சத்தகாண்டம் 7000ல் போகர் கூறியுள்ளார். (பாடல் 5921). அடிக்கடி சமாதி கூடி நீண்ட காலம் நிஷ்டையிலிருந்து வெளிவருவதும் அடிக்கடி விண்வெளிப்பயணம் சென்று வருவதும் அவரது வழக்கம் என்றும் கூறப்படுகிறது.

அவரது வாக்கிய சூத்திரம் முதல்பாடலில் வரும்.

"ஆதி என்ற சட்டை முனிபதத்தைப்போற்றி
அறிவாகச்சூத்திரம்தான் ஆறு சொன்னேன்"

என்ற அடிகள் அவர் சட்டை முனியின் சீடர் என்பதை வெளிப்படுத்துகிறது. சுந்தரானந்தரும் அவரது குருவான சட்டை முனியும் நீண்ட காலம் சதுரகிரிமலை மீதுள்ள சுந்தரலிங்கத்தை வழிபட்டுள்ளனர் என்பது சதுரகிரிபுராணச் செய்தி. அவருக்கு பரமானந்தர்; வாலைச்சித்தர் என்று இரு சீடர்கள் இருந்ததாகவும் தெரிகிறது. இவர் சோதிடம், வைத்தியம் சிவயோகம் என்ற முப்பெருந்துறைகளிலும் பல நூல்கள் எழுதியுள்ளார். அவைகளில் வைத்திய காவியம், சோதிடகாவியம், சிவஞானபோதம் என்பவை சில.

அவர் தமிழகம் முழுவதும் சென்று பல சித்த சாதனைகள் புரிந்தவண்ணம் வெற்றியுலா வந்து வல்லபர் (எல்லாவற்றையும் செய்ய வல்லவர்) என்ற சிறப்புப்பெற்றார் என்ற ஒரு செவிவழிச் செய்தியும் இருந்து வருகிறது. இப்படி செவி வழியாக கூறப்பட்டுவரும் சம்பவங்களில் ஒன்று வருமாறு:

ஒருமுறை அப்போது மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டை ஆட்சி செய்துவந்த அபிஷேக பாண்டிய மன்னன் சுந்தரானந்தரின் தவவலிமையைச் சோதிக்கும் நோக்கத்தில் மதுரை மீனாட்சி அம்மன் கோவில் வளாகத்தில் அவரை சந்தித்து அருகில் இருந்த கல் யானையைக் காண்பித்து "இந்த யானையை உங்களால் கரும்புதின்ன வைக்க முடியுமா? என்று கேட்டார். தவப் பெரியாரும் தன் தவ வலிமையால் அங்கு கரும்பை வரவழைத்தார். அந்தக் கல்யானையும் அந்தக் கரும்பைத்தின்றது. அதைக் கண்ட பாண்டிய மன்னர் சித்தரை வணங்கி அவருக்குப் பல பரிசுகளும் வழங்கினார். அதோடு அவருக்கு ஸ்ரீவல்லபர் என்ற பட்டம் சூட்டி அவர் மதுரையிலேயே நிலையாகத் தங்கிவாழவேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார். கொஞ்சகாலம் வாழ்ந்தபிறகு சுந்தரானந்தரும் கோயில் வளாகத்திலேயே சமாதி பூண்டார். மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில், சுந்தரேஸ்வரர் பெருங்கோவில், சுற்றுப் பிரகாரத்தில் துர்க்கையம்மன் சன்னதிக்கு அருகில் அவருக்கு உருவம் அமைத்து தனி சன்னதியும் அமைத்துள்ளனர். அந்த சன்னதியில் அவர் ஸ்ரீவல்லப சித்தராக இருந்து அருளாட்சி செய்து வருகிறார். அவருக்கு வழிபாடுகளும் நடைபெற்று வருகின்றன.

(யானை உயிர்பெற்றுக் கரும்பைத் தின்றவுடன் சுந்தரானந்தர் சோமசுந்தரப்பெருமான் கருவறையுள் சென்று இறைவனோடு இரண்டறக்கலந்துவிட்டார் என்பது திருவிளையாடல் புராணக் கூற்று)

# 23. அழுகணிச்சித்தர்

*"வெளியினில் ஒளியாய்வந்து மிக்கதோர்*
*அமுதகண்ணர்தான்*
*அழுதபாவனையினோடு கண்ணில்*
*நீர் ஆறாய்த் தோன்றப்*
*பழுதிலாக் கார்காட்டான்தன் பாலனாய்ப்*
*பிறந்துவந்து*
*அழுகண்ணிச்சித்தரென்று அருளுடன்*
*பேரிட்டாரே."*

என்று கருவூரார் வாதகாவியம் 700 என்ற நூலிலல் கருவூர்த்தேவர் பாடியுள்ளார். இதன்படி அழுகணிச்சித்தர் கார்காத்த வேளாளர் மரபில் பிறந்தவர். இவர் அழுத கண்ணீரோடு பாடிக்கொண்டு ஓரிடத்தில் நிற்காமல் நடந்துகொண்டே இருந்தவர். அதனால் இவர் அழுகணிச்சித்தர் என்று அழைக்கப்பட்டார். அகஸ்தியர் வைத்திய ரத்தினச் சுருக்கம் என்ற நூலும் அவர்பெயருக்கு இதே காரணத்தைத்தான் கூறுகிறது. இக்கூற்றுகளால் அழுகணிச்சித்தர் அகத்தியரும கருவூராரும் வாழ்ந்தகாலத்திலோ அல்லது அவைகளுக்கு முற்பட்ட காலத்திலோ வாழ்ந்திருக்கக் கூடும் என்று தெரிகிறது.

"அழுகண்ணிப்பூண்டு' என்ற பெயருடைய நீர்விட்டான் செடி ஒருகல்ப மூலிகைப் பூண்டு, இதைப் பயன்படுத்தி அவர் மருந்து தயாரித்து மருத்துவம் செய்திருக்கிறார். அதனால் கூட அவர்

அழுகணிச்சித்தர் என்றபெயர் பெற்றிருக்கலாம். இவர் வாழ்ந்த முறையைப் பற்றி எதுவும் தெரியவில்லை.

சித்தர் ஞானக்கோவை' என்ற நூலில் இவர்பாடிய தாக 32 பாடல்கள் உள்ளன. அந்தப் பாடல்கள் யாவும் மனித வாழ்கைத் துன்பமயமானது. இத்துன்பத்திலிருந்து விடுபட எனக்கு வழிதெரியவில்லையே. என்று மனம் வருந்திப் பாடியதாகவே உள்ளன. இப்பாடல்களை அவர் 'கண்ணம்மா' என்று ஒரு பெண்ணை முன்னிலைப் படுத்திப் பாடியவைகளாக உள்ளன. மொத்தத்தில் இப்பாடல்கள் யாவும் 'நான் மனிதப் பிறவி எடுத்து மாயைகளான துன்பங்களில் வாடிக்கொண்டிருக்கிறேனே. இந்தத் துன்பங்களிலிருந்து விடுபட்டு உன்பாதக்கமலங்களை வந்தடைய நீ எனக்கு வழிகாட்டமாட்டாயா?' என்று பராசக்தியைப் பார்த்து புலம்பி வேண்டுவது போலவே உள்ளன. எடுத்துக் காட்டாக 8 ஆம் பாடலை

'ஊற்றைச்சடலம்விட்டே என் கண்ணம்மா
உன்பாதம் சேரேனோ?" என்றும்

19ஆம் பாடலை

"உற்றாரும்பெற்றாரும் ஊரைவிட்டும் போகையிலே
சுற்றாரும் இல்லாமல் என் கண்ணம்மா
துணையிழந்து நின்றதென்ன?" என்றும்

24 ஆம் பாடலை

'பட்ட முந்தான்பறிபோய் என்கண்ணமா
படைமன்னர் மாண்ட தென்ன?" என்றும்

28ஆம் பாடலை

'உன்னைமறக்காமல் என்கண்ணம்மா
ஒத்திருந்துவாழேனோ?" என்றும்

*32 ஆம் கடைசிப்பாடலை*

> ***“பிணிநீக்கி என் கண்ணம்மா***
> ***பளித்துவெளி காட்டாயோ?”***

என்றும் பாடிமுடிக்கிறார். இவர் நாகைப்பட்டினம் நீலாயதாட்சி உடனுறை அருள்மிகு காயாரோகணசுவாமி திருக்கோவிலில் ஜீவசமாதி பூண்டு அவருமாய் இருந்து இன்றும் அருளாட்சி செய்து வருகிறார்.

